உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதரு வாணியை உள்நாடு"

| மலர் ௫ | பிரசோற்பத்தி ஆண்டு பங்குனித் திங்கள் 1932ஆ மார்ச்சு மீ | இதழ் ௩ |
| --- | --- | --- |

## கா கா கா

[பத்திராசிரியர்]

[குறிப்பு :—இது 31-12-31ல் சாத்தூர் தமிழ்ச் சங்க ஆண்டு விழாவில் யாம் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.]

**அவைத்தலைவரவர்களே, அருமைச் சகோதரிகளே சகோதரர்களே !**

செந்தமிழ் நூல்களில் காக்கையைப்பற்றிப் பல குறிப்புக்கள் திகழ்கின்றன. அவற்றுள் சிலவற்றையேனும் தொகுத்து ஒப்பிட்டு நோக்குவதே இச்சொற்பொழிவின் நோக்கமாகும். அந்நோக்கத்தை ஈடேற்றுவதற்குரிய அறிவு ஆற்றல் முதலியன என்பாலில்லையென்பது நீங்கள் அறிந்ததொன்று. உங்களுக்குத் தெரிந்த சில பொருள்களையே நான் ஞாபக மூட்ட விரும்புகிறேன். சங்ககாலத்தில் அஃறிணைப் பொருள்களைப் பற்றியும் நூல்கள் எழுந்தன. நரிவிருத்தம் என்றொரு நூலுண்டு. அஃதே போல் காக்கை பாடினியம் என்றும் ஒரு நூலுண்டு.

காக்கையின் உருவம், அமைப்பு, செயல்கள் முதலியவற்றை நோக்குழி அவை நமக்கு அறிவை வளர்க்கும் தகையவாயுள்ளன. கருமை நிறமும், ஒற்றைக்கண்ணும், அழகில்லாத உருவமும், இனிமையற்ற குரலும் காக்கைக்கு உரிமையாயுள்ளன. நிறங்களெல்லாவற்றிலும் தாழ்ந்தது கருமை நிறம். அங்கஹீனங்களுட் சிறந்தது ஒற்றைக் கண்ணுடைமை. வெறுப்புக்கு அடிப்படையாயுள்ளது அழகில்லாத உருவப்புறத்தோற்றம். ஓசையால் வரும் இன்பத்தை மாற்றுவது காக்கையின் குரல். எனவே,

புறப்பொருள்களைக்கொண்டு ஆராய்ந்தால் காக்கை வெறுக்கத்தக்க பறவை யென்று தோன்றும். ஆனால் காக்கையின் செயல்கள் நமக்கு அறிவூட்டு கின்றன.

அதிகாலையில் எழுவதும் சூரியாஸ்தமனமானவுடன் துயில்வதும் காக்கையின் இயல்பு. இப்பழக்கத்தை,

> "Early to bed and early to rise
> Makes a man healthy, wealthy, and wise"

என்ற ஆங்கிலப் பழமொழியோடு ஒப்பிட்டு நோக்குக. எழுந்தவுடன் மும் முறை அடுக்காக "கா கா கா, கா கா கா, கா கா கா" என்று காக்கை கத்துகிறது. உலக நினைவு குறையுமாறு கடவுள் நினைவைப் பெருக் கும் பழக்க முடையோருக்கு இவ்வோசை பல உண்மைகளை நினைவூட்டு கின்றது. சுதந்திரமில்லாத ஆன்மா கடவுளை நோக்கி அதிகாலையில் எழுந்தவுடன் "எல்லாம் வல்ல ஆண்டவனே! என்னைக் காப்பாயாக! நின் திருவருளையன்றிப் பிறி தொன்றின் துணையெனக்கில்லை; என்னாலாவ தொன்றில்லை; 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்குநாயகமே' என்னைக் கா கா கா!" என்று என்பு நெக்குருகக் கரைவதால்தான் ஆணவ மலவீக்கம் எறும்பூரக் கல்லுந்தேயும் என்ற முறையில் சிறிதாவது குறை ந்துவரும் என்பதை "கா கா கா" என்ற ஓசை அறிவுறுத்துகின்றது. பொருளல்லவற்றைப் பொருளென மருண்டுகொண்டு இந்திரிய வயமாகி வினைகளை ஈட்டாது நன்னிலையில் நிற்றலுக்கு உபாயமாக மனதைக் கா =(காத்துக்கொள்), வாக்கைக்கா (=காத்துக்கொள்), காயத்தைக் கா(=காத் துக்கொள்) என்று நம்போன்ற உயிர்கட்கு இறைவன் அதிகாலையில் ஆகாப வீதியில் "கா கா கா" என்று உபதேசம் செய்வதாகவும் இவ்வோசை யைக் கொள்ளலாம். காணப்படும் இவ்வுலகமானது பலதிறப்பட்ட உயிர்க ளாலும் தொடர்புகளாலும் ஆக்கப்பட்டது. அவ்வாறிருந்தும் இவ்வுலகம் முழுமையும் ஒரு தலைப்பட்ட ஆளுகைக்குட்பட்டது (அதாவது இறைவன் ஆளுகைக்கு) சாதாரணமாக ஒரு காவை (பூங்கா, இளமாக்கா முதலிய காவனங்களை அல்லது தோட்டங்களை)ப் பார்த்தால் பலதிறப்பட்ட மரங்க ளிருந்த போதிலும் எல்லாம் ஓர் ஆளுகைக்கும் ஒரு நெறிக்கும் உட்பட் டுள்ளன. எனவே உலகத்தை ஒரு காவுக்கு ஒப்பிட்டு "கா கா கா" என் பது உலகத்தில் கடவுள் ஆளுகை ஊடுருவி நிற்பதை நினைவூட்டுவதாகவும் கொள்ளலாம். மக்கள், மனைவி, சுற்றம் முதலியன வெல்லாம் சந்தையிற் பெருங்கூட்டமும் ஒரு பூங்காவில் சிற்சில மரங்களில் சிறிது நேரம் ஒன்று கத்தங்கிப் பிறகு பிரிந்து போகும் சிறு பறவைகட்குள்ள தொடர்பும் போன்றனவே என்பதை அறிவுறுத்தவும் "கா கா கா" என்ற ஓசை பயன் படும். இன்னம் பலவகையாகத் துருவி யாராய்ந்தால் பலதிறப்பட்ட உண்மைகளும் புலனாகும். எனவே "கா கா கா" என்பதையே ஒரு மந்திர மாகவும் கொள்ளலாம். நினைத்தால் செம்பொருளையும் விழுமிய பயனையும் தருவது மந்திரமாகும். கா கா கா என்பதும் இத்தகையதேயாகும்.

காக்கை குப்பையைக் கிளறி அதிலுள்ள புழுக்கள், நோய்க்குப் பிறப்பிடமான கிருமிகள் முதலியவற்றைத் தின்னும். அதாவது எளிமையை இகழாது துன்பத்தை மேற்கொண்டு அவ்வாறு மேற்கொள்வதால் பிறவுயிர்கட்கு இன்பத்தை நல்கும் உயர்ந்த குணம் காக்கைக்கு உண்டு. இக்குணத்தையே சமூகச் சேவை செய்வோர் பெரிய குறிக்கோளாகக் கொள்வர் (Ideal of Social Service). குப்பையைக் கிளறினும், காக்கை நாடோறும் குளித்த பிறகே கூட்டி லடையும்.

காக்கைக்கும் நாய்க்கும் ஒரு பெரிய வித்தியாசமுண்டு. நாய்க்குத் தீனி கிடைத்தால் பிறநாய்களைச் சேரவொட்டாது மருட்டி ஓட்டித் தன்னந் தனியாயிருந்து அத்தீனியைத் தின்னும். காக்கையோ உறவினரைக் கூவியழைத்து எல்லோருடனும் சேர்ந்துண்ணும். இவ்வரிய செயலையே தாயுமானூர் "காக முறவு கலந்துண்ணக் கண்டீர்" என்ற பாடலிலும், திருவள்ளுவர்,

"காக்கை கரவா கரைந்துண்ணுமாக்கமும்
அன்ன நீரார்க்கேயுள"

என்ற குறளிலும் சிறப்பித்துள்ளார்கள். இத்தகைய நிகழ்ச்சிகள் சிலவற்றிலிருந்து பற்றில்லாத செயல் இயற்கையிலுமுள்ளது என்று ஒரு மனநூலாசிரியர் முடிபு கூறுகின்றூர் (Altruism is found also in Nature and is not peculiar only to man.) பிறருக்கு நல்ல பொருள்களைத் தந்துதான் பிறர் வேண்டாப்பொருள்களை மட்டும் கொள்வது சான்றோரது சிறந்த செயல். அச்செயல் காக்கையிடத்து முள்ளது. வாழை, மா, பலா முதலிய பல பழங்கள் நிறைந்துள்ள,

"கரும் பொழில் வாய் வேம்பன்றே காக்கை விரும்புங் கனி."

வேறு சில பிராணிகளைப்போல் காக்கை எதிர்த்து சண்டையிடுவதில்லை. ஒரு நாயின்மீது கல்லெறிந்தால் உடனே அது துரத்திவரும். ஆனல் "காகமானது கோடி கூடுகின்றூலும் ஒரு கல்லின்முனெதிர் நிற்குமோ?" சத்வகுண மிகுதியால் நிற்பதில்லை. என்றூலும் இல்லறம் நடத்துவதில் காக்கை ஒருவருக்கும் பின்வாங்குவதில்லை. "காக்கைக்கும் தன் குஞ்சுபொன் குஞ்சு" என்பதில் உண்மைக்குப் பல பொருள்கள் உள்ளன. கோழி, நாய் முதலிய பிராணிகளைப்போல் காக்கை பகிரங்கமாகவாவது வெறுக்கத்தக்க அளவு மிகுதியாகவாவது மெய்யுறு புணர்ச்சி செய்வதில்லை. காக்கை புணர்வதை மக்கள் காண்பது கூடாமையாகும். தப்பித்தவறிக் கண்டுவிட்டால் அக்காட்சி தீவிரமரணத்துக்குரிய சகுனம் என்பர் பெரியோர்.

காக்கையை மக்கள் சில வழிகளில் ஓம்புவது வழக்கம். "யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி" என்ற திருமந்திர வாக்கின்படி உண்ணும்போது ஒரு பிடிசாதத்தைக் காக்கைக்கு (வாயசபலி) வைப்பது இத்தமிழ் நாட்டினர் வழக்கமாயிருக்கிறது. வாயசம் வலமானல் நல்ல சகுனம் என்பர் சகுனநூலார். வலமாவது உலகத்தில் நடைபெறும்

சுழற்சிமுறை. துருவ நக்ஷத்திரமாகிய என்றும் மாறாத நிலைக்கெதிரில் முகத்தை வைத்து நின்றால் இடத்திலிருந்து வலம்வருவதே வானத்தி லுள்ள கோள்கள், நக்ஷத்திரங்கள் முதலியவற்றின் ஓட்டமாகும். எனவே, வலம் வருதல் (Counter clockwise motion) தான் சரியான ஓட்டம் என்று (Positive or proper motion) வான நூல் கூறுகிறது. ஆகை யால் வாயசம் வலம் வந்தால் எல்லாம் சரியாக நடக்கும் என்று சகுன நூல் கூறுவதும் இயல்பே. அகத்துறையில் குயில், நாரை, புறா, கிளி, அன்னம் முதலிய பறவைகளைத் தூது விடுவது போலவே காக்கையையும் தூது விடு வது செய்யுள் வழக்கு.

காக்கை சனீச்சரனுக்கு வாகனமாக வுள்ளது. சனீச்சரன் ஒருவனே எமனுக்கு அடுத்தபடியாக வெறுக்கப்படுபவன். எனவே எருமை மாட் டுக்கு அடுத்தபடியாகப் புறத்தோற்றத்தால் வெறுக்கப்படும் காக்கையும் எருமைச் சாரதியாகிய கூற்றுவனுக்கு அடுத்தபடியாகக் கருதப்படும் சனீச் சரனுக்கு வாகனமாகவுள்ளதும் இயல்பே. நவக்கிரகங்களுள் சனீச்சரன் ஒருவனே கடவுளின் மறக்கருணையையும் ஆன்மாக்களில் ஆணவமலவிருள் முதலியவற்றையும் விளக்கும் ஆற்றல் மிகுதியுள்ளவன். காக்கையும் "காகா" என்ற ஓசையாலும் தனது வாழ்க்கைச்செயல்களாலும் இவற் றை நன்கு விளக்குகின்றது. எனவே இம்முறையிலும் சாரதிக்கும் ஊர் திக்கும் பொருத்தமுண்டு.

காக்கை உருவமெடுத்த கடவுளர் முதலியோர் கதைகளுமுள்ளன. கணபதி காக்கை உருவமாகக் கரகத்து நீரைக்கொட்டின பிறகே காவேரி நதி உற்பத்தியானதாகக் கூறுவது ஒருவகை வழக்கு. காகாசுரன் கதை யும் நாம் அறிந்த தொன்றே.

இறைவனே காக்கை யென்றுங் கூறலாம். அண்டங் காக்கை அவன் தொழில் (= அண்டத்தைக் காத்தல்). இத்தகைய உண்மைகளை யெல்லாம் "காகாகா" என்ற தொடர் அடக்கி யுள்ளது. இதுவரை செவிமடுத்த உங் களுக்கு வணக்கம்.

"காலை யெழுதல் காணாமலே புணர்தல்
மாலை குளித்து மனைபுகுதல்—சால
உற்றாரைக் கூவி உடனுண்டு வாழ்தல்
கற்றாயோ காக்கைக் குணம்."

---

# அறிவிப்பு

மறு மாதம் முதல், திருவாசகம் மூலமும் உரையும் நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டு ஒரு பாரத்துக்குக் (16-பக்கம்) குறையாமல் "சித்தாந்த"த்தில் வெளிவரும்.

# சிவாலய வழிபாட்டின் நுட்பங்கள்

[சிவஸ்ரீ சுவாமிநாத சிவாசாரியார்]

"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித் [குப்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச் சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீயென்றும் ஆரூரா என்றென்றே அலறு நில்லே."

இத்திருத்தாண்டகத்தின் நுட்பத்தை நோக்குங்கால் நமது வாகீசப் பெருமான் நிலைத்த நெஞ்சம் பெறுதற்குக் கோவில் வழிபாடே சிறந்த கருவி என்று உபதேசித்திருக்கின்றார் என்பது நன்கு விளங்குகின்றது. கோவில் என்பதற்கு வடமொழியில் ஆலயம் என்று சொல்லுவார்கள். ஆலயம் என்பதின் பொருள் யாதென்று உன்னுவோமாகில் ஆ என்பதற்கு ஆன்மா என்றும் லயம் என்பதற்குப் படிதல் என்றும் பொருள் படுகின்றமையால், ஆன்மாவானது, இறைவனது திருவடியில், இலயித்திருப்பதற்குரியது ஆலயம் என்றும்; பின்னும் ஒரு பெயரைக் குறிக்க வேண்டிய இடத்தில் அப்பெயரின் முதலெழுத்தைக் கொள்ளலாம் என்ற முறைப்படி நோக்கின், ஆ என்பது ஆணவ மலத்தையும் லயம் என்பது அடங்கி இருத்தலையும் குறிக்கின்றமையால், ஆலபம் என்பது, ஆணவம் லயமாய் அடங்குவதற்குரிய இடம் என்றும் பெறப்படுகின்றன. அன்பர்களே! நாம் ஆலயத்துட் செல்வோமாகில் மனமானது, மற்ற விஷயங்களினின்றும் விடுபட்டு, இறைவனிடத்தே உறைவதைக் காண்கின்றோம். மேலும், நாம் ஆலயத்துட் சென்று, அங்கு ஆண்டவனைத் தரிசிக்கவரும் மெய்யன்பர்களைக் கண்ணுறுவதினால் நமது ஆணவமும் அடங்குகின்றது.

## ஆலயங்களின் ஆவச்யகம்

ஆலய வழிபாடானது ஞானம் கைவரப் பெறாத மக்களுக்கே உரியதென்று சிலர் நினைக்கக்கூடும். ஆனால், சிவஞான சித்தியாரில்,

"திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே
யுருக்கோலி மந்திரத்தா லெனவினையு மவர்க்கு
முளனெங்கு மிலனிங்கு முளனென் பார்க்கும்
விருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரிபோன்
மந்திரத்தில் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கு
முருக்காண வொண்ணாத பான்முலைப்பால் விம்மி
யொழுகுவது போல்வெளிப்பட் டருளுவனன் பர்க்கே"

என்று சர்யாவான், கிரியாவான், யோகி, ஞானி என்னும் நால்வர்க்கும் சிவாலய வழிபாடு சிறந்ததென்று கூறப்பட்டிருக்கிறது. இவ் வாலய வழிபாடானது நம் சைவ மக்கள் மாத்திரமே யன்றி, கிறிஸ்தவர் முதலியவர்களாலும் சிறிந்ததெனக் கையாளப்பட்டு வருகின்றது. ஸ்ரீகண்டபரமேசுவரர், ஆன்மாக்கள் உய்வதற்காகச் சிவாலய நிர்மாணத்தைக் கூறுமிடத்து தத்வங்களின் உண்மைகளை உள்ளடக்கியே விதித்திருக்கின்றார்.

பிற மதஸ்தர்களின் ஆலயங்கள் தங்கள் தங்கள் மனப்போக்கின்படி அமைக்கப்பட்டுள்ளன. நம் ஆலயங்களோவெனில், ஒவ்வொன்றும், முதனூல்களின்படியே இயற்றப்பட்டு, தத்துவ ஞானத்தை யுண்டாக்குவதற்கு இன்றியமையாக் கருவிகளாய் விளங்குகின்றன.

சிவாலயங்கள் மக்கட்கு எத்தகைய உண்மைகளைப் பயக்குகின்றன வென்று கவனிப்பாம். சிவாலயங்கள் எல்லாவற்றிலும் கர்பக்ரஹம், அந்தராளம், அர்த்தமண்டபம் என்று மூன்று பாகங்கள் அமைக்கப்பெற்று இருப்பன ஆத்மதத்வம், வித்யாதத்வம், சிவதத்வம் என்னும் இவைகளைக் குறிக்குமுகத்தால், தத்வங்களே சிவபெருமானுக் குறைவிடம் என்னும் உண்மையை விளக்குகின்றன.

இது அன்றி மற்றொருவகை அமைப்பும் விதிக்கப்பட்டிருக்கிறது. அதாவது, சிவாலயமானது, ஈசாநம் தத்புருடம் அகோரம் வாமதேவம் ஸத்யோஜாதம் என்னும் ஐந்து பிரஹ்மங்களாலாய ஐந்து மண்டபங்களை உடையது என்று சிவபுராணம் கூறுகின்றமையாலும் தன்னை வழிபடுபவர்கள் உய்யும்பொருட்டு, பஞ்சப்பிரஹ்ம மந்திரத்தாலாய உருவத்தை எடுத்துக்கொள்ளுகிறார் என்று சிவாகமங்கள் கூறுகின்றமையாலும் சிவபெருமான், வழி படுபவர்களின் பொருட்டு ஆலயத்தை ஸ்தூல தேஹமாகவும், உள்ளிருக்கும் சிவலிங்கத்தை, சூக்ஷ்ம தேஹமாகவும் கொண்டுள்ளார் என்று தெரிகின்றது. இதன்றி,

“ காயமே கோயி லாகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி யிலிங்க மாக
நேயமே நெய்யும் பாலாய் நிறையநீ ரமைய ஆட்டிப்
பூசனை யீச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே.”

என்று நமது வாகீசரும், ‘உள்ளம் பெருங்கோயில்’ என்று திருமூலரும் கூறியிருக்கின்றமையால், யோகிகளின் சரீரத்தின்கண் அமைந்துள்ள தத்வங்களை ஆலயங்கள் விளக்குகின்றவென்றும் சிலர் கூறுகின்றனர். இனிச் சிவாலயத்தில் வைக்கப்பட்டுள்ள உருவங்களினால் நமக்கு எத்தகைய நுட்பங்கள் விளங்குகின்றனவென்பதை நோக்குங்கால், எல்லா ஆலயங்களிலும் பிரதானமாக வைத்து வணங்கப்படும் சிவலிங்கத்தினால் புலப்படும் உண்மைகள் பல. உருவம் உண்டென்றும் இல்லை என்றும் சொல்லொணாத உருவத்தை உடைய சிவலிங்கத்தைக் கடவுளைக் குறிக்கும் பிரதானக் குறியாக வைத்திருப்பதிலிருந்து இறைவன் அருபியாகவும், ரூபியாகவும் இருக்கிறார் என்பது விளங்குகின்றது.

மேலும், சிவலிங்கத்தின் அமைப்பை நோக்குங்கால் இன்னும் சில உண்மைகள் விளங்குகின்றன. அதாவது, சிவலிங்கமானது உடுக்கை போன்ற கீழ்ப்பாகத்தையும், தண்டுபோன்ற மேற்பாகத்தையும் கொண்டிருக்கின்றது. பீடமாகிய கீழ்ப்பாகத்தைப் பிந்துவென்றும், அதன் மத்தியில், தண்டம்போல் விளங்கும் பாகத்தை நாதம் என்றும் சிவாகம புராணங்கள் கூறுகின்றமையால் பிந்து ரூபமான சக்தியும் நாதரூபமான சிவமும் சேர்ந்

திருக்கும்போது பிரபஞ்ச சிருஷ்டி முதலியன ஏற்படுகின்றன என்பது விளங்குகின்றது.

மேலும், பீடத்தின் கீழ் வட்டத்தை ஆன்ம தத்வம் என்றும், மேல் வட்டத்தை வித்யா தத்வம் என்றும் மேல் பாகத்தை சிவதத்வம் என்றும் சிவாகமங்கள் கூறுகின்றமையால், சிவதத்வமானது, ஆன்மதத்வம், வித்யா தத்வம் இரண்டையும் தன்னுள் அடக்கிக்கொண்டு, தான் ஒன்றிலும், அடங்காது இருக்கின்றதென்பது புலப்படுகின்றது.

சிவலிங்கமானது, ஒரு யோகியானவன் பத்மாஸநத்திலிருந்துகொண்டு நிஷ்டையிலிருக்கும் தோற்றத்தைக் குறிக்கின்றது என்றும் கூறப்பட்டிருக்கிறது. சிவலிங்கத்தில் சாத்தப்பட்டிருக்கும் அஷ்டபந்தநமானது, பிரகிருதி, மஹத், அகங்காரம், சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்னும் எண்வகை பந்தங்களையும் தன்வசத்தில் வைத்திருப்பவன் இறைவனே என்பதை உணர்த்துகின்றது.

இனி, சிவலிங்கத்திற்கு எதிராக, நந்தியும் பலிபீடமும் வைக்கப்பட்டிருப்பது,

"ஆய பதிதா னருட்சிவ லிங்கமா
மாய பசுவு மடலே றெனநிற்கு
மாய பலிபீட மாகுநற் பாசமா
மாய வரனிலை யாய்ந்துகொள் வார்கட்கே"

என்று திருமூலர் கூறி இருக்கின்றமையால், பதிபோல் பசுபாசமும் அநாதியே இருக்கின்றதென்பதையும், ஆன்மாவானது, சிவநோக்கத்துடனிருக்கும்போது, பாசம் ஆன்மாவைப் பின்பற்றி நிற்கின்றதென்பதையும் பாசத்தொடர்பு ஆன்மாவுக்கேயல்லாது இறைவனுக்கல்ல வென்பதையும் விளக்குகின்றது.

சிவபெருமானுக்கு முன்பு இடப்பட்டிருக்கும் திரையினின்றும் 'மாயையெனும் திரையை நீக்கி நின்னை அறியவல்லார்' என்று தாயுமான சுவாமிகள் கூறியிருக்கின்றாராதலாலும் சிவபுராணத்தும் மாயைதான் திரை என்றும் கூறப்பட்டிருக்கின்றமையாலும் இறைவனிடத்திலிருக்கும் திரோதாயிகா என்னும் சக்தியானது ஆன்மாவுக்கு சிவதரிசனம் உண்டாகாதவாறு மறைத்துக்கொண்டிருக்கிறதென்றும் இறைவனருளால் அச்சக்தி நீங்கிய வழி ஆன்மாவுக்கு சிவதரிசனம் ஏற்படுகின்றதென்றும் புலப்படுகின்றன. ஆலயத்துள் வைக்கப்பட்டிருக்கும் ஸோமாஸ்கந்தர் முதலிய மூர்த்தங்கள் சிவசக்தியின் சேர்க்கையினால் உண்டாகும் மூர்த்திபேதங்களைக் குறிக்கின்றன. ஒவ்வொரு மூர்த்தியின் அமைப்பைப்பற்றியும் கூறுதல் மிக விரிவாகும். ஆதலால் இத்துடன் நிறுத்திக்கொண்டு வழிபாட்டைப்பற்றி விசாரிப்போம்.

வழிபாடென்பது அகம் புறம் என்று இருவகைப்படும். அக வழிபாடென்பது,

"அந்தரியா கந்தன்னை முத்திசா தனமா வறைந்திடுவ ரதுதானு மான்மசுத்தி யாகுங்
கந்தமலர்புகையொளிமஞ் சனமமுது முதலாக் கண்டனவெலா மனத்தாற் கருதிக்கொண்டு

சிந்தைதனி லர்ச்சிக்கச் சிவனைஞா னத்தாற் சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவியா னுளத்தே வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே''

என்று கூறியபடி வழிபாட்டிற்குரிய திரவியங்களை மனதினாற் கற்பித்துக்கொண்டு, ஆன்ம லிங்கத்திலே சிவனை அருச்சித்தல். புறவழிபாடென்பது, தான் விரும்பிய ஓர் உருவத்தின் கண்ணே சிவபெருமானை ஆவாகித்து வழிபடுவதாகும். அகவழிபாட்டில், மனம் ஒன்றுதான் பயன்படுகின்றது. புறவழிபாட்டில் மனம் வாக்குக் காயம் எல்லாம் பயன்படுகின்றமையால் இப்புற வழிபாடே அகவழிபாட்டினும் சிறந்ததென விளங்குகின்றது. ஆகையினால்தான், சிவாகமங்கள், அகவழி பாட்டைப் புற வழிபாட்டிற்குச் சாதனமாகக் கூறுகின்றன. மேலும், புற வழிபாட்டில் விதிக்கப்படும் ஒவ்வொரு சடங்கும், அகவழிபாட்டின் கருத்தையே உட்கொண்டிருக்கின்றமையால் புற வழிபாடானது அகவழி பாட்டைத் தன்னுள் அடக்கி நிற்கின்றது.

இனிப் புறவழிபாட்டில் கூறப்படும் சடங்குகள் ஒவ்வொன்றையும்பற்றிக் கூறுவது மிக விரிவாகும். ஆகையினால் முக்கியமான சிலவற்றின் உட்கருத்தைப்பற்றி விசாரிப்போம். சிவபூஜை செய்வதற்கு முன்பு ஆத்ம-த்ரவ்ய-ஸ்தாந-மந்திர-லிங்கம் என்னும் ஐந்தையும் சுத்தி செய்யவேண்டும் என்று கூறியிருப்பது, சிவபெருமான் தத்வங்கடந்தவர், அவரை வழிபடவேண்டின் பிரணவ உபாஸனையிற்கூறியவாறு பிரமன்முதலிய காரணேச்சுவரர்களைக் கடக்கவேண்டும் என்பதைக் காட்டுகின்றது. சிவபூஜையில் முதலில் கூறப்பட்ட ஆவாகநமானது (தன்னெதிரில் உள்ள உருவத்தில் கடவுளை இருக்கச் செய்தல்) இறைவனருளால் அவனது பூரணத் தன்மையை அறிந்து அதில் அழுத்துதலையும், ஸ்தாபநமானது (தான் இருக்கச் செய்தவனை நிலைபெறச் செய்தல்,) தான் கொண்ட ஞானம் நிலைபேறாகப் பொருந்துவதையும், ஸந்நிதானமானது (நன்றாக வைத்தல்) சிவபூரணத்தில் ஆன்மாவினது அடிமை உணர்வும் ஆன்மாவின் அடிமையுணர்வில் சிவனாது அநுக்ரஹமும் இடைவிடாமலொன்றி இருத்தலையும், ஸந்நிரோதநமானது, (தகைதல்) மேற்சொன்ன சிவானுக்கிரஹமும் ஆன்மாவினது தாசபாவனையும் நீங்காது நிலைத்திருத்தலையும் குறிப்பிடுகின்றது. இதற்குப் பிரமாணம் வாதுளாகமத்துட் காண்க.

பிறகு விதிக்கப்படும் பாத்தியம் ஆசமநம் அர்க்கியம் இம்மூன்றில் முறையே பாத்தியமானது ஆன்மாவானவன் நல்வினை தீவினையைப் பகுத்தறிந்து, தன்னைச் சிவபதத்திற் கிலக்காகச் செய்தலையும், ஆசமனமானது, தான் சிவாநந்தத்தைப் பருகுவதையும், அர்க்கியமானது, தான் சிவத்தன்மையைப் பெறுதலையும் விளக்குகின்றன.

சிவபெருமானுக்குச் செய்யப்படும் அபிஷேகமானது "நேயமே நெய்யும் பாலாய் நிறைய நீரமைய ஆட்டி" என்று வாகீசப்பெருமானும், "அன்பே மஞ்சனநீர்" என்று தாயுமானவரும் கூறியிருக்கின்றமையால் சிவபெருமானிடம் அன்பு செய்வதே அன்னார்க்குச் செய்யும் அபிஷேகமாம் என்பதை

யுணர்த்துகின்றது. பல்வகைப் பூக்களினல் அருச்சித்தல் அறிவு சமபாவனை சந்தோஷம் முதலியவைகள் சிவபெருமானுக்கு இன்பம் விளைவிக்கக்கூடிய மலர்கள் என்பதையும் 'பக்தி மலர் தூவ முக்தியாகுமே' என்றும் கூறியிருக்கின்றமையால் பக்தியே இறைவனுக்குக்கர்தமலர் என்பதையும் ஞாபகப்படுத்துகின்றன. நிவேதனமானது பராபர போதமாகிய அகங்காரம் சங்கற்பம் குரோதம் மோகம் முதலியவைகளை இறைவனிடம் கொடுத்தல்தான் நிவேதித்தில் என்பதைக் காட்டுகின்றது.

இதற்குமேல் செய்வது தீபாராதனை. அதாவது, பலவகை தீபங்களைச் சிவபெருமான் முன்பாகக் காட்டுதலாகும். தீபங்களினல் ஞானம் உண்டாகும் என்று சிவாகமங்கள் கூறுகின்றமையினல், எத்தகைய ஞானம் உண்டாகின்றது என்பதைக் கவனிப்போமாகில் முதலாவது தூபம் காட்டுவது இறைவனிடம் இருக்கும் திரோதான சக்தியையும், பிறகு காட்டப்படும் ஒரு தீபம் இறைவன் ஒருவன்தான் ஆதியில் உள்ளவன் என்பதையும், இரண்டு தீபம் சிவசக்தியையும், மூன்று தீபமானது பதி பசு பாசத்தையும், நான்கு தீபம் ஸதாசிவமீருகவந்ததையும், ஐந்து தீபமானது நிவிருத்தி முதலிய கலைகளின் தோற்றத்தையும், அடுக்கு முதலிய தீபங்கள் சிருஷ்டியின் விசேஷத்தையும், அதற்குப் பிறகு செய்யப்படும் தட்டு குடம் முதலியவைகளின் ஆராதனையானது பிந்துவினிடமிருந்து உண்டான ஐந்துபூதங்களும் பிந்துவினிடமே லயத்தை அடைகின்றனவென்பதையும், பின்னர் அப்பிந்துவும் சிவத்திடையே அடங்குகின்றது என்பதையும், கடைசியாகச் செய்யப்படும் கற்பூர ஹாரத்தியானது, ஆன்மாவானவன் சிவ வழிபாட்டினல் கற்பூரம் ஸ்வரூப நாசத்தை அடைவது போல் அகங்காரத்தை இழந்து, சிவஸாயுஜ்யத்தை அடைகின்றுன் என்பதையும் விளக்குகின்றன. மேல்செய்யும் ஒவ்வொரு உபசாரத்துக்கும் உள்ள தத்துவார்த்தத்தைச் சொல்லப்புகின் மிக விரிவாகுமாதலால் இத்துடன் நிறுத்திக்கொண்டு, புறவழிபாட்டின் ஒரு பகுதியாகிய ஆலயதரிசனத்தினல் நமக்கு விளங்கும் நுட்பத்தைக் கவனிப்போம்.

நாம் ஆலயத்துட் சென்று, அங்கு விளங்கும் துவஜஸ்தம்பத்தைக் கண்டதும் இறைவனை அடைந்தவர் அழிவற்ற ஆநந்தத்தில் நிலைத்திருப்பர் என்பது நமக்குப் புலப்படுகின்றது. அதன் பிறகு, பத்திர லிங்கமாகிய பலிபீடத்திடம் சென்று, நம்மிடமிருக்கும் காமம் குரோதம் உலோபம், மோஹம், மதம், மாச்சரியம் என்பவைகளைப் பலிகொடுத்து விட்டு, உட்செல்லுவோமேல் சமம் தமம் முதலிய தருமமே உருவாகக் கொண்டவரும், சிவாநந்தத்திலிருப்பவருமான நந்தி எம்பெருமானுகிய நல்லாசிரியனை அடைகின்றேம். பிறகு அவர் திருவருளால் சிவபெருமானைக் காண்கின்றேம். பின் சிவபெருமானது சாமீப்யத்தை அடையவேண்டின் அந்நமய ப்ராணமய மநோமய விஞ்ஞாநமய ஆநந்த மயமென்னும் ஐந்து கோசங்களாகிய பிரகாரங்களைக் கடக்கவேண்டும். ஒவ்வொரு பிரகாரத்திலும் வலம் வருதலானது ஒவ்வொரு கோசத்திலும் உழன்று

தெளிந்து அதை விடுத்து மேலே செல்வதாம். இங்ஙனம் ஐந்து பிரகாரங்களையும் கடந்தால் சிவபெருமானது சாமீப்யத்தை அடைவோம் என்னும் உண்மை விளங்குகின்றது. இங்ஙனமே அன்பர்கள் ஆலயங்களில் செய்ய வேண்டுமென்று விதிக்கப்பட்ட திருவலகிடல் திருமெழுக்கிடல் புற்களைதல் முதலிய ஒவ்வொன்றிலும் உண்மைகள் பதிந்து கிடக்கின்றன. இத்தகைய உண்மைகளடங்கிய கோவில்களைச் சோம்பேறிகளுடைய வசதிகள் என்றும் வழிபாடுகளைப் பிழைப்புக்குரிய ஒரு தொழில் என்றும் கருதாது உண்மை நோக்கத்துடன் வழிபடுவோமாகில் இறைவன் நமக்கு முக்தி விடளிப்பார் என்பதில் எட்டுணை ஐயமுமில்லை. ஆலய வழிபாட்டினால் நற்கதியடைந்தவர்கள் பலர். சைவ சமயத்துள்ள நம் சமயாசாரியர்கள் எல்லோரும் ஆலய வழிபாட்டையே கையாண்டிருக்கின்றார்கள். தற்காலத்திய ஆலயங்கள் சீர்திருத்தவேண்டிய நிலையிலிருக்கின்றனவென்பது உண்மையே. அத்தகைய குறைபாடுகள் உண்டாயிருப்பதற்குக் காரணம் யாதென்று நோக்குங்கால், ஆலயங்களைப் பரிபாலிக்கின்றவர்கள் ஸமய ஞாநம் பெறாதவர்களாயும் ஸமயாநுஷ்டாநத்தில் குறையுடையவர்களாயு மிருப்பதும், ஆலயத்துள்ளவர்கள் ஆராய்ச்சியின்றி ஆலயத்தைத் தங்கள் தொழிற்சாலையாகக் கொண்டிருப்பதும், வழிபடுபவர்கள் காமிய வழிபாட்டையே மேற்கொண்டவர்களாய் ஆலயங்களை வியாபார ஸ்தலங்களாகக் கொள்வதே காரணம் என்று கூறுவதில் இழுக்கொன்றுமில்லை. ஏனெனில் தற்காலத்திய ஆலய பரிபாலகர் கடவுளை ஒரு காட்சிப்பொருளாகவும் ஆலயங்களைக் காட்சிச்சாலைகளாகவும் செய்து வருகின்றனர். அங்குள்ளவர்களிற் பெரும்பாலார் தங்கள் கடமையையும், தாங்கள் எதற்காக ஏற்பட்டவர்கள் என்பதையும் மறந்து வழிபடவருபவர்களிடம் ஊதியம் பெறுவதே தமக்குரிய வேலை என்று நினைத்துத் தங்கள் சாஸ்திர ஆராய்ச்சியைக் கை சோர விட்டனர். அவர்கள் அங்ஙனமாகிவிட்டதற்கு அவர்களை ஆதரிப்பார் இல்லாததே காரணமாகும். வழிபட வருபவர்களும், இறைவனது இருப்பிடமாகிய ஆலயங்களைத் தங்கள் அன்பர்களைச் சந்திக்கக்கூடிய ஸங்கேத ஸ்தாநமாகக் கருதுகிறார்களாதலால் ஆலயங்கள் சீரழிந்து கிடக்கின்றன. இவைகளைச் சீர்திருத்துவது நம்மாற் சுலபமாக ஆகக்கூடியதன்று. சமுத்திரத்தில் முத்துக் குளிக்கச் செல்பவன் அங்குள்ள மற்றவைகளைக் கவனியாது, முத்தை மாத்திரம் கொள்ளுவதுபோல், நாமும் மேற் சொல்லிய தத்வ நோக்கத்துடன் ஆலயஞ் சென்று, இறைவனை வழிபடுவோமேல், அவர் நம்மை ஆட்கொள்ளக் கடவர். நம் வாகிசர் 'தன்கடன் அடியேனையுந் தாங்குதல்-என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்று கூறியிருப்பதைச் சிந்தித்து வழிபடுவோமாக.

# திருவிசைப்பா ஆசிரியர்கள்

[இலக்கண விளக்க பரம்பரை சோமசுந்தர தேசிகர்]

## திருமாளிகைத் தேவர்

திருவிசைப்பா ஆசிரியன்மாருள் முதன்மையாக விருப்பவர் திருமாளிகைத் தேவரே. இந்நாயனுரைப்பற்றிப் பலர் பல விதமாகக் கூறுவர். காலஞ்சென்ற கோபிநாதராவ் திருமாளிகைத் தேவரும் சேந்தனரும் ஒருவரென்று 'செந்தமிழில்' எழுதினர். சேந்தனருடைய கல்வெட்டோடு சேர்ந்து திருமாளிகைத் தேவர் கல்வெட்டும் காணப்படுவதுவே காரணமாகக் காட்டினர். இக்கல்வெட்டுகள் முதன் முதலாக வெட்டப்பட்டவற்றை யழிக்கவேண்டி வந்த காலத்தில் படியெடுக்கப்பட்டு மறுபடியும் வெட்டப்பட்டன. ஆகவே பல கல்வெட்டுக்கள் சேர்த்து வெட்டப்பட்டிருக்க வேண்டும். இக்காரணம் இருவரும் ஒருவரேயெனக் காட்டப் போதியதாகாது.

மற்றொரு சாரார் திருமாளிகைத் தேவரென்று ஒருவரிருந்தார் என்பது மாத்திரமே கேட்கப்படுவதன்றிப் பிறிதொன்றும் தெரிவதில்லையென்பர். பிறிதொரு சாரார் அரச குடும்பத்தைச் சேர்ந்தவரென்பர். அவர் சொல்லுவதற்கு ஆதாரம் அவரேயன்றிப் பிறிதில்லை. திருமாளிகைத் தேவரைப் பற்றித் திருவாவடுதுறைப் புராணத்திற் காணப்படுவதின் சாரம் வருமாறு:—திருவாவடுதுறையிலே படர்ந்துள்ள அரசின்கீழ் யோகத்திருந்த போகநாதரிடம் தீக்ஷைபெற்ற அந்தணரென்றும், ஆலயத்துக்குத் தென்புறத்திலே திருமடமொன்று அமைத்துக்கொண்டு சைவ சமயத்தை வளர்த்து வருநாளில் ஒருநாள் காவிரியில் நீராடித்திரும்புகையில் எதிரே மரித்த சவமொன்று கொண்டு வருவதைக் கண்ணுற்றபோது அதனல் உண்டாகும் தீட்டில் தொடக்குறுதிருக்கும்படி விநாயகரை வேண்ட, அவர் அருளின்படி அச்சவம் உயிர் பெற்றெழுந்ததாகவும், அவர் தவவலிமையால் அழகு வாய்ந்து விளங்குவதைக் கண்ட மாதர் அவரைப்போல நன்மக்களைப் பெற்றனரென்றும், அவற்றைக் கண்ட ஊரார் துறவியின்மேல் அலர் தூற்ற, அவ்வலர் அரசன் செவிக்கெட்டியதென்றும், அரசன் தேவரைப் பெரியாரென்று மதியாது காவலரைக்கூய் அடியவரைப் பிணித்துவரச் சொன்னதாகவும், பிணிக்கவந்த காவலர் திரும்பிச் சென்றதாகவும், அரசனே நேரிற்றண்டு கொண்டுவர தேவர் கோயில் மதில்களிலுள்ள நந்திகளை யேவி அரசனை உயிரோடு பிணித்துவரச் சொன்னதாகவும், கட்டுண்டு எதிரில் வந்த அரசன் பெரியாரைக் கண்டு திடுக்கிட்டுத் தான் செய்த அபசாரத்தை மன்னிக்க வேண்டினனென்றும் கூறும்.

வடிமப் பாதம் வைத்த அப்பரிசுடைய இடைமருது எனும் திருவிடைமருதூர் என்னுந் தலத்திலே மருதவாணரது ஆலய நிருவாகம் நடாத்தி வந்த பரியேறும்பெரியோர், தெய்வப் படிமப்பதம் வைத்தோர், மாணிக்கக் கூத்தர், குருராயர், சைவராயர் என்ற ஐந்து சொத்தருள் ஒருவரான

சைவாரயர் என்பாருடைய மடத்துக்குத் திருமாளிகை மடம் என்றுபெயர். இந்த மடத்திலுள்ளார் சோழ அரசர்களுடைய குருமாராவர். இவர்களெல்லோரும் ஆதி சைவர்களே யாவர். இவர்கள் பிற்காலத்திலும் தகுதி பெற வாழ்ந்ததாகவே தெரிகிறது.

இம்மடத்திலுள்ள பெரியாரொருவரே ஈண்டுக்குறிப்பிட்ட திருமாளிகைத் தேவராவர். இவர் காலம் முதலியன அறிவதற்கில்லையெனினும், திருவிசைப்பா ஆசிரியன்மாருள்ளே முதல்வராகவே பத்தாம் நூற்றாண்டிலிருந்த கண்டராதித்தருக்கு முற்பட்டவரென்றும், முதலி மூவருள் ஒருவரான தம்பிரான் தோழராம் சுந்தரமூர்த்திகளுக்குப் பிற்பட்டவரென்றும் கருதுவது பிழையாகாது. இவர் ஆதி சைவரும் இராச குருவுமாகவே, திருவிடை மருதூரிலே வாழ்ந்தவராவர். இவர்கள் வாழ்ந்து வந்த மடத்துக்கு மாளிகை மடம் என்று பெயர். திருவீழிமிழலைச் சிவபெருமானுக்குச் சில திருப்பணிகள் செய்ததாகக் கல்வெட்டுக்களுண்டு. இப்பெரியார் பாடியதாகக் காணப்படுபவை நான்கு பதிகங்களே. இந்நான்கு பதிகங்களும் தில்லைக் கோயிலைப்பற்றியனவே யாம்.

## வேணாட்டடிகள்

பச்சைக் கர்ப்பூரம் விளையும் கேரள நாடாகிய சேரநாட்டிற்கும் தென் பாண்டி நாட்டிற்கும் நடுவணதுளது வேணாடு. இஃதொரு காலத்துக் கன்யகுப்ஜ நாடு என்று சொல்லப்பட்டது. இக்கொடுந் தமிழ் நாட்டிலே பிறந்த பெரியாரொருவர் சிவபத்தி அடியார் பக்தியிலே முதிர்ந்தவராயிருந்தார். அவர் சிவபக்தி முதிர்ச்சியானே தலங்கள்தோறும் சென்று சிவபெருமானை வழிபட்டு அன்பு மேலிட்டுப் பாடுவாராயினர். இவ்வாறு பாடிக் கொண்டே திருப்பதிகளைக்கண்டு சேவித்துச் சென்றவர் பொன்னம்பலத்தில் தங்கி யெம்பெருமானை வழிபட்டுக் கூத்துகந்த பெம்மான் திருவடிநிழலை யடைந்தார்.

சிவபெருமான், தமது மெய்யடியாரை வேண்டுமளவுந் துன்புறுத்தித் தூய்மையாக்கும் இயல்புக்கேற்ப, இவரையும் பல துன்பங்களோடு பிணியையும் அனுபவிக்கும்படி செய்வித்தார் என்றும், அதனாலே இவரை பேயாகக் கருதி இகழ்ந்தனர் போலும் என்றும் அதனையும் கருதாது சிவபெருமான் அடித்தொண்டா யிருந்தாரென்றும் சிலர் கூறுவர். அவ்வாறு கருத நான்காவது செய்யுள் இடந்தரவில்லையென்பது கவனிக்கத்தக்கது.

இவர் பாடல் ஒரு பதிகமே கிடைத்திருப்பினும் அப்பதிகத்தை யூன்றி நோக்கின் பல புதிய செய்திகள் வெளிப்படுகின்றன. இவர் செய்யுள் செய்வதில் வல்லவரென்பதோடு அரிய பெரிய பழமொழிகளைக் கையாளுவதில் கைதேர்ந்தவர். 'தம்பானை சாய்ப்பற்றார்' என்பது அவர் பாடலொன்றிற் காணப்படும் பழமொழி. தனக்கு உதவ ஒருவருமில்லையென்பது இப்பழமொழியின் கருத்து. தம்பானை என்றது தன்னைச் சார்ந்தோர் என்பது. பொருளில் 'தம்பானை சாயப் பிடிப்பாளர்'

என்றும், 'தம்பானை அயற்பானை கிடையாது' என்றும் பழமொழிகள் வழங்குகின்றன. 'பொசியாதோ கீழ்க்கொம்பு நிறை குளம்' என்பது அவர் உபயோகித்த மற்றொரு பழமொழி. நிறைகுளத்தின் கீழ்கரை வெளிப்பக்கமும் நீர் ஊறும் என்பது பொருள். இது வழக்காறற்ற பழமொழியாகக் கருதப்படுகிறது. 'கைச்சாலுஞ் சிறு கதலி இளவேம்புங் கறி கொள்வார்' என்பது மற்றொரு பழமொழி. ஒரு சார்புமில்லாதவனுயினும் அவனையும் ஆண்டவன் கைவிடமாட்டான் என்பது கருத்து. இதே பொருளில் பழமொழிகள் இல்லாத போதிலும் இச்சொற்களையுடைய பழமொழிகள் உண்டு. 'வாழையிளம் பிஞ்சொழியக் கனி யருந்தோம்' என்பது முதுமொழி. கறிக்கு உதவாத வாழைக்காய் பந்தலிலே கட்டித் தொங்கவோ' என்பது பழமொழி. 'கன்றுபிரி கற்றுப்போல்' என்பது அவர் பதிகத்திற் காணப்படும் பிறிதொரு பழமொழி. கன்று கெட்டால் தாயருகே யென்றும் கன்றிழந்த பசுப்போல் தவிக்கிறுன் என்றும் பழமொழிகள் வழங்குகின்றன. இன்னும் இவை போன்றன பலவாம்.

## திருவாலி யமுதனுர்

'நிலத்திஞேங்கிய நிவந்தெழும் பெரும் புனனீத்தம் மலர்த்தடம்பணை வயல்புகு பொன்னி நன்னுடு' என்று ஆன்ருேரால் புகழப்படும் சோழ நாட்டிலே, 'என்னுள்ளங்கவர்கள்வன்' இவன் என்று காட்டிய பாலருவாய ராம் ஞான சம்பந்தப் பெம்மான் பிறப்பிடமான சீர்காழிப் பதிக்குத் தெற்கிலுள்ளது திருவாலி யென்னுமூர். ஆலிநாடன் என்றும் திருமங்கை மன்னன் என்றும் பெருமை பெற்ற திருமாலடியாரான திருமங்கையாழ்வார் அவதரித்த ஊரும் அதுவேயாம். அங்குக் கோயில் கொண்டுள்ள திருமாலுக்கு ஆலியமுதன் என்பது திருநாமமாகும். அவ்வூரிலே அமுதன் என்ற பெயரைத் தாங்கிய சிவனடியார் ஒருவர் இருந்தார். அவர் அடியார் பத்தி சிவபக்தியில் முதிர்வாராயினர். அதற்கேற்பத் தனக்கு வழிபடு கடவுளாகத் திருத்தில்லை நடமாடுங் கூத்துகந்தபெம்மானைக் கொண்டார். அவரது திருவெழிலைக் கனவிலும் நனவிலும் சிந்தித்த அவர் 'உலகின் புறக்கண்டு தாமின் புறுவர்' என்பதற்கேற்பப் பிறரும் இன்புறும் வண்ணம் தோத்திரமாகப் பாடியருளினுர். இஃதன்றி மற்றும் நான்கு பதிகங்களும் நமக்குக் கிடைத்துள்ளன. அவை சொற்சுவை பொருட்சுவை நிறைந்தனவாயிருத்தலோடு மனதைக் கவரும் சக்தி வாய்ந்தனவாயிருத்தல் ஓதியுணர்ந்தார் அறிந்த தொன்றும். இவ்வாறு பெருமையுற வாழ்ந்த அடியாரது காலம், சாதி, வரலாறு ஒன்றும் இதற்குமேல் அறிவதற்கில்லாமை பெரிதும் வருந்துதற்குரியதாம்.

சிலர் இவர் திருமயிலாடு துறையில் பிறந்தவரென்றும் சாதியில் அந்தணர் என்றும் கூறுவர். அதற்குரிய ஆதாரம் ஒன்றும் கிடைத்திலது; குறிக்கப்படவுமில்லை யாகலான் அவை ஆதாரமில்லாக் கூற்றேயாம். எனினும் இவர் திருமால் பெயர்தாங்கி நிற்றலான் திருமாலடியவராக விருந்து சிவநேயராக மாறினுரோ வென்பது சிந்திக்கத் தக்கதாம்.

## புருடோத்தம நம்பி

திருவிசைப்பா பாடிய பெரியோர்களில் எட்டாவதாகக் காணப்படுபவர் புருடோத்தம நம்பி. இவரைப்பற்றிய வரலாறு ஒன்றும் அறிவதற்கில்லை யெனினும் இவர் வைணவ சம்பிரதாயத்தைச் சார்ந்தவராக விருப்பாரோ என்று ஐயுறவேண்டியிருக்கின்றது. புருடோத்தமப் பெயர் திருமாலுக்கே யுரியது. அஃதெவ்வாறாயினும் இவர் பழுத்த சிவநேயச் செல்வரென்பதில் யாதொரு ஐயமுமில்லை.

இவரது பதிகங்கள் இரண்டு கிடைத்திருக்கின்றன. இரண்டும்பொன் னம்பலத்தைப்பற்றினவே. நாயக நாயகி பாவங்கொண்டு நயமுறப் பாடுவதில் இவர் திறமை வாய்ந்தவர். அவற்றுள் இரண்டை ஈண்டுக் குறிக்கிறேன்.

எங்களை யாளுடை யீச னேயோ விளமுலை முககெக முயங்கி நின்பொற்
பங்கயம் புரைமுக நோக்கி நோக்கிப் பனிமதி நிலவதென் மேற்படாச்
செங்கயல் புரைகண்ணி மார்கண் முன்னே திருச்சிற்றம் பலமுட னேபுகுந்து
வங்குன பணிபல செய்து நாளு மருள்பெறி னகலிடத் திருக்கலாமே.

அருள்பெறி னகலிடத் திருக்க லாமென் றமரர்க டலைவனு மயனு மாலு
மிருவரு மறிவுடை யாரின் மிக்கா ரேத்துகின் றாரின்ன மெங்கள் கூத்தை
மருள்படு மழலைமென் மொழியுமையாள் கணவனை வல்வினை யாட்டி யேனு
னருள்பெற வலமரு நெஞ்ச மாவா வாசையை யளவறுத் தாரிங் காரே.

---

# சைவ இளைஞர் மகாநாட்டுத் தலைமைப் பேருரை

[சாமி. வேலாயுதம் பிள்ளை, பி. ஏ., எல். டி.]

அன்போ ருருவாய் அமர்ந்தநல் லாதியை
இன்பெனும் பொருளை ஈன்றபே ரொளியைக்
கற்பனை கடந்த கருணை வாரிதியைப்
பற்றுதும் பற்றுதும் பாங்குற
நற்றவத் திலங்கு நன்மையெய் ததற்கே.

இளமையென்னும் அரிய செல்வம் நிறையப் பெற்றோர்களே! அன்பர் என்பூடுருகக் குனிக்கும் கூத்தப்பிரான் திருவருளால் நமது இளைஞர் மகாநாடு மூன்றாம் முறை கூடியிருக்கின்றது. முன்னிரு முறையும் இரு இளையபெருந்தகையார் தமது தொண்டின் விரிவினாலும் அறிவின் ஆற்றலாலும் நமது மகாநாட்டை நடத்தினர். இப்பொழுது யாவர்க்குங் கீழாம் அடியேனை அவர்களிருந்த விடத்தில் இருத்துவது பொற்றவிசு நாய்க்கிடு மாறன்றோ? எனினும் தங்கள் கட்டளையை மறுத்தற்கஞ்சி என்னுலியன்

றவை செய்வதைத் தங்கள் அறிவினால் திருத்திக் கொள்ளுமாறு வேண்டு கின்றேன்.

இளைஞரியக்கங்களும் உலக முன்னேற்றமும்:—உலக முழுவதும் ஏற் பட்டுள்ள புரட்சியால் இளைஞரே எல்லா இயக்கங்களையும் ஊக்கப்படுத்தி வளர்பிறைபோல் ஒளிரச் செய்வதைக் காணலாம். நம் நாட்டிலேயே வானர சங்கங்களும் பிராமணரல்லா இளைஞர் சங்கங்களும் கண்டதே காட்சி கொண்டதே கோலமென்று நாத்திகம் பேசி நாத்தழும்பேறும் சுயமரியா தைச் சங்கங்களும் வளர்ந்து வருவது அறியக் கிடக்கின்றது. பிற நாடு களாகிய சீனா, எகிப்து, துருக்கி முதலியவைகள் முன்னேற்ற மடைவதும், எல்லா நாடுகளிலும் ஆயிரம் ஆயிரமாகச் சாரணப்படையில் சேர்ந்து அணிவகுத்துத் தீமையுடன் போர் புரிவதும் இளைஞர்களின் இனிய செயலேயன்றோ? இவ்வுலகம் இன்றிளைஞராயிருப்பவர் ஆட்சியுள் நாளைப் படுமாதலின் இவர்கள் முன்னதாகவே அதற்குத் தக்க பழக்கங்களையும் சீர்திருத்தங்களையும் செய்து கொள்வதும் இயற்கையேயாம். இன்னும் இளைஞரே பெரியாரினும் உடல் நலமுற்று ஊக்கத்துடனும் உற்சாகத்துட னும் உழைக்கக் கூடியவராதலினாலும், தன்னலங் கருதுஞ் சிறுமை யுறாத வராதலானும், பற்று, அவா முதலியன குறைவாக உடையராதலானும் பொதுநலங்கருதி உழைப்பதற்குத் தக்கவர்களாகக் கருதிப் பெரியோரும் அவர்களை ஊக்கப்படுத்துவாராயினர்.

இறை நெறியும் இளைஞர்களும்:—இப்பொழுது உழைத்து வருகிற இளைஞராகிய நம்மாலன்றி நம்முன்னவருள்ளும் இளைஞராலேயே நம்நெறி முன்னுக்கு வந்திருக்கிறது; அதுமட்டுமா, உயிருடனுமிருக்கிறதென்பதை நினைக்க நினைக்க நமக்கு ஊக்கம் மிகுவது இயல்பே. புறநெறிக் கோளரி யாகித் திருநீற்றுத் தொண்டுபுரிந்து இறைநெறியைச் சில ஆண்டுகளுக்குள் இந்நாட்டில் நாட்டிய ஆளுடைய பிள்ளையாரும், தொண்டர்க்குத் தொண்ட ராய்ப் பலவகை நயத்துடனும் இனிமையுடனும் இறை நெறியாளரைக் களிப்புறச் செய்து ஆடல்புரிந்த எம்பிரான் தோழரும், அழுது அழுது அக்காரந்தீட்டிய அருமையான மாணிக்க மொழிகளைப் பொழிந்து கல்லை யுங் கரையச்செய்த ஆளுடைய அடிகளும், பொய்ந்நெறி நீக்கி மெய்ந்நெறி விளக்கிய மெய்கண்டாரும், நாளாறிற் கண்ணிழந்தப்பவல்ல கண்ணப்ப ரும், தாதை தாளொடு பிறவித் தாளெறிந்த தண்டீசரும் இன்னும் பலப் பல இறை நெறி முதல்வர்களும் இளைஞரேயன்றோ? இதுமட்டுமோ? ஆண்டு முதிர்ந்ததற்கொப்ப அன்பும் முதிர்ந்து பெரும்பாடுபட்டு அருந்தொண் டாற்றிய நம் அப்பரும், மனைவி சொன்ன சூளால் இளமை துறந்த திரு நீலகண்டரும் இன்னோரன்ன பலரும் இளமையடைந்தே திருவடி நீழ லெய்தினர் என்பதையும், நம்மிறைவனின் வடிவுகள் பலவற்றுள்ளும் யாவ ராலும் பெரிதும் போற்றப்படுவதாய், என்றும் இளையதாய், அழகிதாய்ப் பண்டைத் தெய்வத்திளநலந்திகழ்ந்து கமழ்வது முருகனென்னும் இளைய பிள்ளையாரே யென்பதையும் நினைத்துப் பார்க்க இளமைக்கும் இறை நெறிக்கும் உள்ள தொடர்பு யாவற்றினுஞ் சிறந்ததொன்றென்பதை உள்

னினும் உள்ளம் உருகுவதாகுமன்றோ? இத்தகை இயற்கை நலஞ் சிறந்த சிரியரே! முற்கூறப்பட்ட இளஞ்சிங்கங்கள் போன்று எழுங்கள், உழையுங்கள், முடிந்த முடிபெய்தும் வரை இளைப்பாறுதீர்கள்!

நம்மிளைஞரின் நிலை:— இவ்வாறு உழைப்பதற்கான வழியாதென ஆராயப்புகின் நம்மிளைஞரின் நிலையே அதனை விளக்குவதாகும். மேலைநாட்டுப் புதுக் கொள்கைகள் வந்து தாக்குகின்ற வலிவினால் இளைஞரன்றி முதியோருள்ளும் பெரும்பான்மையோர் அதற்கு ஈடுபட்டு முன்னேற்றம் அடைய வேண்டுமென்னுங் கொள்கையுடனே பணத்தொண்டு புரியலாயினர்; கல்வியை அதற்கெனவே கற்கின்றனர்; உழைப்பையும் வாழ்நாள் முழுவதையும் பொருளீட்டுவதிலும் புலன்வழிச் செல்லலினும் சேமித்து வைப்பதிலும் கழிக்கின்றனர். அந்தோ! இவர் உயிரொன்றுண்டென்பதையும் அதற்கு உறுதி தேடவேண்டுமென்பதையும் மறந்தார் போலும்! சிறிது நினைப்பு உடையவருங்கூட 'ராஜாங்கத்திலமர்ந்த வைதிக சமய'மாகிய உரிமையுடைய வழியிருக்க, அதை விடுத்து வேதாந்தமென்னும் மாயாவாத ஆராய்ச்சியிலும், சுமார்த்தமென்னும் உணர்வுகுன்றிய வழியாகிய குழிகளிலும் வீழ்ந்து மயங்குவாராயினர். நமது சைவத்துறவிகளெல்லாம் பொது நலமாவது பாராட்டாது செஞ்சோற்றுக் கடனையாவது கழிக்காது வீண் பொழுது போக்குதலால் சிறிது உணர்வுடையோர் அவ்வாட்சி முறையை ஆராய்ந்து அதைச் சீர்திருத்த முயலுவாராயினர். எனவே, சைவ சித்தாந்தத் தேனமுதருந்துவோர் சிலரேயாயினர். இறைநெறியாகிய தலைநெறியை உலகிற்கு ஈந்து, தமிழ் மறைகள், ஆகமங்கள், புராணங்கள் முதலியவற்றை இயற்றித் தனக்கே உரிய தமிழ்த் தொண்டர்களையும் அவர்கள் உண்மை வரலாற்றையும் தொகுத்தும் வகுத்துங் கூறி உயரிய அறிவியல்களைப் பேருணர்வு பொலிய விளக்கிய பெரியார்களிருந்த நம் தமிழ் நாட்டின் நிலை இதுவாயின் பிறநாடுகளின் தன்மையைக் கூறவும் வேண்டுமோ? அவர்கள் வழிவழி வந்த மக்களாகிய நாம் இனி வாளாவிருக்க வியலுமா? ஆகையினாலன்பர்களே! நாம் இனிச் செயல் முறையை ஆராய்வாம்.

ஒப்புரவும் உயரிய வழிகளும்:— முதலில் இளைஞர்களாகிய நாம் ஒத்துழைக்கவேண்டும். ஒப்புரவினால் வருங்கேட்டை உணர்ந்தோர் நம் தமிழர்களே யாதலினாலும், 'அடியேனுன் அடியார் நடுவுளிருக்கு மருளைப் புரியாய்' என்னும் வேண்டுதல் தமிழரிற் சிறந்தோரொருவரால் புகலப்பட்டதாலாலும் நாம் தொகையடியார்களாய்க் கூடிக்கூடி 'உன்னடியார் குனிப்பார் சிரிப்பார்களிப்பாரால்' என்ற வாக்கின்படி நடந்து 'வாடி வாடி வழியற்றேன் வற்றன்மரம் போனிற்பேனோ' என்று பரிந்து வாடி வழிகாண்போமாக. அவ்வாறு காண இளஞ்சிறுர் முதல் யாவரையும் பழக்குங் கடமையும், பழகுங் கடமையும் நமக்கு மிருப்பதால் அடியேன் சிற்றறிவுக் கெட்டியபடி மூன்றுவகைக் கூட்டங்கள் ஏற்படுத்திக் கொள்வது நலமாகும். அக்கூட்டங்களின் பெயர், கொள்கை, தொண்டுகள் பின்வரும் பட்டியலில் குறிக்கப்பட்டுள்ளன.

| எண் | பெயர் | முதற் கூட்டம் | இரண்டாவது கூட்டம் | மூன்றவது கூட்டம் |
|---|---|---|---|---|
| 1 | பெயர் | பாலருவாயர் படை. | சண்டீசர் சங்கம். | அப்பர் அவை. |
| 2 | ஆண்டு | பத்து ஆண்டுகளுக்குட்பட்ட சிறுவர். | பத்து முதல் பதினெட்டு ஆண்டுக்குட்படல். | முப்பதாம் ஆண்டுக்குட் பட்டவர். |
| 3 | கொள்கை (Motto) | இறைவா இன்னமுதே எனக்கார் துணை நீயலதே. | என்கடன் பணிசெய்து கிடப்பதே. | ஞாலநின் புகழே மிகவேண்டுந் தென் ஆலவாயில் அமர்ந்துறை ஆதியே. |
| 4 | தொண்டுகள் 1 | நாள்தோறும் முழுகல், ஆடை தோய்த்தல், கை கால் பல் முதலிய உறுப்புக்களைத் தூய்மையாக வைத்திருத்தல். | சமயதீக்கை பெற்று நாட்செயலை முறைப்படி நடத்தல். | விசேட தீக்கைபெற்று பூசை செய்தல். |
| | 2 | புலால், புகையிலை, காப்பி முதலியன மறுத்தல். | திங்கட்கிழமை, நஞ்சுண் (பிரதோஷம்), இறை இரவு (சிவராத்திரி) முதலிய நோன்புகளில் ஒன்றை நோற்றல், பிறரைப் புலால் முதலியன மறுக்கும்படி தூண்டல். | இவற்றிற்கான உதவி புரிதல், நோற்றல். |
| | 3 | இறைவற்கொரு பச்சிலை, பசுவிற்கொரு வாயுறை, உண்ணும்போதொரு கைப்பிடி உதவல், இனியன கூறல். | நாள்தோறும் தவறாது ஓர் உயிருக்காவது ஒரு நன்மையாவது செயல். | பசுக்களைப்பேணல், அடியார்க்கு அமுது ஆடை முதலியன உதவல். |
| | 4 | தவறாது கண்மணி திருநீறு அணிதல். | திருநீறு தயாரித்தளித்தல், கண்மணிமாலை கட்டிக்கொடுத்தல். | இவற்றை ஈதல், அணிபவரை மிகச் செய்தல். |
| | 5 | பூவெடுத்தல், கட்டல், உழவாரத் திருப்பணி, திருவிளக்கேற்றல், சந்தனம் அரைத்தல் முதலிய பணியுள் ஒன்றாவது இயற்றல். | ஷை பணி செய்வதுடன் அதற்கான உதவி உடலுழைப்பால் புரிதல், பூஞ்செடி வைத்தல், நீர்ப் பாய்ச்சல், எண்ணெய் எடுத்துக் கொடுத்தல் முதலியன. | இவற்றுடன் பொருளுதவி புரிந்து நடத்தல். |
| | 6 | சிவ சிவ என்று நாளொன்றிற்கு 300 உருப் [போடல். | திருவைந்தெழுத்தை 1008 முறை பயிலல். | ஷை 2016 முறை பயிலல். |
| | 7 | தவறாது நாள் தொறுங் கோயிலுக்குப் போதல். | கோயிலைத் தூய்மைப் படுத்தல், நாட் செயல்களுக்கான உதவி புரிதல். | திருப்பணி, குடமுழுக்கு விழா முதலியன ஏற்பாடு செய்தல். |
| | 8 | இறைநெறி முதற்சுவடியில் தேர்ச்சிபெறல். | ஷை இரண்டாஞ்சுவடியில் தேர்ச்சி பெறல். | ஷை மூன்றாஞ் சுவடியும் வள்ளுவர் நூல் முதலிய ஆறுந் தெளிதல். |
| | 9 | பொறுக்கித் தொகுத்த 25 பாடல்களைப் பாடம் பண்ணி ஓதல். | அகத்தியர் தேவாரத் திரட்டில் பொறுக்கப்பட்ட எட்டுப் பதிகமும், ஏனைய 25 பாடலும் பாடம் பண்ணி ஓதல். | ஷை தேவாரத் திரட்டு 25 பண்ணும், திருவாசகத்தில் 6 பதிகமும் பாடம் பண்ணி ஓதல். |
| | 10 | ஏனைய பாலர்களையும் படையிற் சேர்த்துப் பழக்கல். | சங்கத்திற்கு அங்கத்தினரைச் சேர்த்துப் பழக்கல். பெரியார் அவை இளைஞர் படைக்கு வேண்டிய தொண்டு புரிதல், | அவை உறுப்பினரை மிகச் செய்தல், விழாச் சொற்பொழிவு, படை சங்கங்களை ஏற்படுத்தல், மகா சம[illegible] |

பட்டியலைப்பற்றிய சில குறிப்புகள் :—(அ) 'இரவு நீக்கி ஓட்டிய இறைமையில் ஓரைந்தும் நீங்கு'மென்று கபிலர் குறித்துள்ளபடி இரவு உள்படப் பத்து ஆண்டும், நாம் முதிர்ச்சியுறுகிற பதினெட்டாம் ஆண்டும், மூன்றற்றொரு பொருளைத் தப்பாமற்றன்னுள் பெறவேண்டியதற்கு ஔவையார் குறித்துள்ள பொழுதாகிய முப்பதாம் ஆண்டும் முறையே முதல், இரண்டு, மூன்றாவது வகுப்புகளுக்கு எல்லையாகக் குறிக்கப்பட்டுள்ளது.

(ஆ) முழுகும் முறை; பல்விளக்கும் வகை; புலால் முதலியவற்றால் உண்டாம் கேடுகள்; கண்மணி அணிவதாலாகும் பயன்; திருநீறு அணியும் முறை, பயன்; பூவெடுக்கும் வகை; திருவிளக்கேற்றுவதன் பயன்; திருக்கோயிலில் வழிபடும் வகை; ஆங்கு செய்யத்தகாதன; பொறுக்கப்பட்ட 25 பாடல்கள்; மூன்று நாயனாரின் வரலாறு; இறைநெறி உண்மைகளில் அறிவில் பதியக்கூடியன முதலியன முதற் சுவடியில் அடங்கும்.

(இ) நாட்செயல் முறை; நோன்பின் வகை, பொருள், பயன்; திருநீறு செய்யும் வகை; கண்மணி மாலைகட்டும் முறை; அதுகொண்டு திருவைந்தெழுத்தை உருப்போடும் வகை; திருக்கோயிலில் நடக்க வேண்டிய நாட்செயல் முறை; பாடஞ் செய்யவேண்டிய பதிகங்கள், பாடல்கள்; இறைநெறி உண்மைகள்; பத்துநாயன்மார்களின் வரலாறு முதலியன இரண்டாம் சுவடியில் அடங்கும்.

(ஈ) போற்றி செய்யும் வகை; திருப்பணி, குடமுழுக்கு, விழாவின் பயன், உட்பொருள் முதலியன; வள்ளுவர் நூல், அன்பர் மொழிவாசகம், தொல்காப்பியம், பரிமேலழகர் உரை, தொண்டர் புராணம், தொகைச் சித்தி இவற்றின் உட்கிடை; பசுவின் பெருமை; திருவாசகத்திலிருந்து பாடஞ் செயற்குத் தகுந்த அகத்தியனு ரெட்டையுங் குறித்து நிற்கின்ற பதிகங்கள் முதலியன மூன்றாஞ்சுவடியில் தெளிவு பெறல் நலமாகும்.

(உ) இப்பட்டியலினுங் குறிப்புகளினுங் காணப்படுவன ஒருவரால் சில நாட்களில் தொகுத்து வகுக்கப்பட்டனவாகும். இங்குள்ள இளைஞர்கள் தக்க சிலரைத் தேர்ந்தெடுத்து ஒரு கழகமாய் அமர்த்தி ஆராயச் செய்து சுவடிகளையுந் தொகுக்கச் செய்தல் பெரும்பயனுறுவதற்குத் தக்க வழியாம். அத்துடன் நில்லாது ஆண்டுகள் தோறும் இந்நூல்கள், முறைகளில் தேர்தல்களை நடத்தியும் அவைகளில் தக்கார்க்குப் பரிசு, பட்டயம் முதலியன அளித்தும் வருவோமாயின் ஊக்கம் மிகும். இவையன்றி விடுமுறைகளில் பயிற்சிக்கூட்டங்களை (Training Camps) நடத்திச் சிறிய பெருந்தகையார்களைப் பழகச்செய்து ஏனையோர்களைப் பழக்கச் செய்வதும், தக்க சொற்பொழிவாளர்களைத் தேர்ந்தெடுத்து அவர்கள் வாயிலாக நமது கொள்கைகளைப் பரப்புவதும் தக்கதாகும்.

இளைஞரும் உடல் நலமும் :—இவ்வாறு மூன்று வகைக் கூட்டங்களை ஏற்படுத்திக்கொண்டு செய்வனவன்றி நம் யாவராலும் புரியவேண்டிய தனிச் செயல்களும் பல உள.* அவற்றுள் முதலாவது நம் உடல் நலத்தை

* இவை பன் சேர்ந்த கழகத்தாரால் பின்பற்றப்படின் மிகவும் பயன் தருவனவே.

யும் வலிவையும் பேணுதலாகும். அரியேறன்ன இளைஞர்களே! நம் நெறி ஏனைய நெறிகளைப்போல் நம் உடலைப் பொய்யென்றும், அதை வாட்டி நலி வுறச் செய்யவேண்டுமென்றுங் கற்பிப்பது அன்றென்பதை யாவரும் அறி வீர்கள். நாட்செயல் முதல் நம் ஆகமங்களில் கற்பிக்கப்பட்ட ஒவ்வொரு செயலும் நம் உடலை வலிவுபடுத்தி நெடிதுய்க்குமாறு செய்வனவன்றோ? எட்டுறுப்பு நெறி (இராஜயோகம்), பிடிவாதப் பழக்கம் (ஹடயோகம்) முதலியன நம் நாட்டிலேற்பட்டவையன்றோ? மூவாயிரம் ஆண்டு வாழ்ந்து அரிய திருமுறையொன்றியற்றிய திருமூலர் நம் தமிழகத்தவரன்றோ? அவர் கூறியுள்ள பாக்களில் இரண்டு எவ்வளவு தெளிவாய் உடலின் பெரு மையை வலியுறுத்துகின்றன பாருங்கள் :—

"உடம்பா ரழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே."

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண்டா னென்று
உடம்பினை யானிருந்து ஓம்புகின் றேனே."

இவ்வாறு ஓம்பாது நாம் ஏனை நெறிகளைப் பின்பற்றுவதாலும், பணப் பேராசையாலும், வருந்திக் கற்பதாலும் உடலை நலியச் செய்யலாகுமா? அன்பர்களே! நம்மிளைஞர்கள் இப்புது நாகரிகம் வந்து படிவதற்கு முன் பயின்றபடி சிலம்பம், சடுகுடு, நொண்டி, உப்புக்கோடு, கிளித்தட்டு முத லிய ஆண்மை தரும் விளையாட்டுக்களைக் கைக்கொண்டு, கரடிக்கூடம் முத லியன ஆங்காங்கு ஏற்படுத்தி வலுவடைவோமாக. இன்னும் வேடிக்கை யான விளையாட்டுகளையும் பழக்கங்களையும் நம் நெறிமுறையாகத் தொகுத்து முற்கூறிய மூன்று கூட்டத்தாரையும் விளையாடச் செய்து களிப்பும், நல னும், வலிவும் உறச்செய்வோமாக.

இரண்டாவதாகத் தூய்மை யென்பதை அறவே மறந்து திருக்கோயி லின் உள்ளும் புறம்பும், திருவீதிகளிலும், வழியோரங்களிலும், ஆறுகளி லும், குளக்கரைகளிலும் எச்சில் உமிழ்தல், சிறு நீர்கழித்தல் வெளிக்குப் போதல் முதலிய தீய செயல்களைப் புரிந்து நமக்கும் பிறருக்கும் வெறுப் பையும், அருவருப்பையும், நோயையும், தீவினையையும் உண்டாக்கிக் கொள்ளுகிறோமன்றோ? ஏதேனும் ஒரு திருவிழா அல்லது சந்தை கூடு மாயின் நம்மவர் யாவரும் ஆடுமாடுகளைப் போன்று மானத்தை விடுத்துக் கண்ட விடங்களிலெல்லாம் அழகலாதன செய்யும் கொடிய பழக்கம் நம்மை இழிவுறச் செய்கின்றதன்றோ? இவற்றைத் தவிர்ப்பதற்கு வேண்டிய வழி தேடி அறிவுறுத்திக் கொள்ளல் நமது கடமையன்றோ? இதற்கான முயற்சி எடுத்துக்கொள்வதுடன் திடீரென உடற்கு ஒரு ஊறுநேரின் அதைத் தடுக்கத்தக்க முதலுதவிகளையும் நம் சிறுவர்களுக்குக் கற்பித்துத் தொண்டு செயச் செய்தலும் வேண்டுவதாகும்.

மூன்றாவதாக இறைநெறிக்குந் தமிழுக்கும் உள்ள தொடர்பு தொன்று தொட்டதாகும்; அதுமட்டுமா? இறைநெறி இவ்வூழியில் பிறப்பதற் கிடமாயதும் வளர்வதற்கு வழி கொடுத்ததும் தமிழ்நாடும் தமிழுமேயன்றோ? இத்தகைத் தொடர்பை மறந்து ஆரியப் புத்தகப் பேய்கொண்டு பிதற்றும் மக்கள் சிலராயினர். இதனால் ஆரியத்தை இகழவேண்டுமென்பதில்லை; ஆரியமுந் தமிழும் உடனே சொலிக் காரிகையார்க்குக் கருணை செய்த பொருளை மறக்கவேண்டுமென்பதில்லை. ஆனால் தமிழ்ப் பெரிய புராணத்தைப்போல் ஆரியப் புராணம் செய்து வைத்துக்கொண்டு யாவும் ஆரியத்திலிருந்து வந்ததென்றும், அதற்கே சிறப்பு மிகையென்றும் கூறும் "அசிக்க ஆரியங்களோடும் ஆதரைப் பேதவாதப் பிசுக்கரைக்" காணவும் அம்ம நாம் அஞ்சுமாறே யாகின்றது. ஆதலின் தமிழுக்குஞ் சிறப்புரிமை கொடுத்து, சிறிது சிறிதாக நாம் செய்யும் நெறிச் செயல் யாவற்றையும் சிலரே அறியும் ஆரியத்தில் செய்வதை விடுத்து யாவர்க்கும் உரித்தாம் தமிழில் செயல் முறைக்குக் கொண்டுவரவேண்டியவர்களாயிருக்கின்றோம். அறிவியல்களை மூடிவைக்கும் பழக்கத்தால் ஆரியத்திலெழுதிவைத்த சில முன்னோர்களைப் போலல்லாமல் பன்னிரு திருமுறை, பதினான்கு அறிவு நூல் முதலியன எழுதிவைத்த சீரியர்களைத் தழுவி, வேதம் ஆகமம் முதலியவைகளில் உள்ள நமக்கு ஒப்பான, பயன்படக்கூடிய பங்குகளைத் தமிழில் எழுதிவைத்துக் கையாளவும் முன்வரவேண்டும். அப்பொழுதுதான் இறைநெறி யாவர்க்கும் பொதுவாய் எளிதில் பரவக் கூடியதாகுமென்பதை நாம் உய்த்துணர வேண்டும். இதற்கேற்ப இரவில் பாரதம் இராமாயணம் வாசிப்பிப்பதற்கு மாறாகப் பெரிய புராணம், கந்தபுராணத்தை வாசிப்பிக்க வேண்டும்.

நான்காவதாக நம்முன்னவர் புத்தன் முதலாகப் புல்லறிவிற் பல் சமயங்களையும் ஆய்ந்து அளந்து அவைகளின் படித்திறங்களை முறை செய்து வைத்தனர். அப்பொழுது வழக்கிலிருந்தவரை இப்பொழுது நாம் கிரித்தவர், முகம்மதியர், பாரசிகர் முதலியவருடனும் பழகவேண்டியவர்களாயிருக்கின்றோமாதலின் அவர்கள் கொள்கைகளையும் ஆராய்ந்து சீரியவைகளைப் பாராட்டித் தொகுத்து முறை செய்தல் வேண்டுமன்றோ? அதற்கான கழகமொன்று தேர்ந்தெடுத்தலுந் தக்கதாம்.

ஐந்தாவதாக நம் நெறிக்கு அடிப்படையாய் அமர்ந்துள்ள கோயில்களில் நாமும் ஈடுபட்டு முத்தியடைய வேண்டுமென்னும் நோக்கத்துடன் நம்முன்னோர் பெருந்திரளான பொருளைக் கொடுத்திருக்கின்றனர். இவற்றையெல்லாம் பாதுகாக்க வேண்டிய கண் காணிப்பாளர் (Trustee) ஆவதற்கென நெறியென்பதிதுவென அறியாத ஆட்சியாளர் (Politicians) ஆயிரம் ஆயிரமாகச் செலவழித்துப் புகுந்து கொள்ளுகின்றனர். பின்னர் பாலுக்குக் காவல் பூனை ஏற்பட்டதுபோல் அப்பொருளில் பெரும் பகுதி தங்கள் தேர்தல் செலவிற்கு ஈடுபடுத்திக் கொள்வதிலும், தம்புலன் வழிச் சென்று இன்பந் துய்த்தலினும் செலவிட்டுத் தீவினை மூட்டை கட்டிக்

கொள்ளுகின்றனவே! அந்தோ! இதைப் பார்த்திருக்க வியலுமா? எஞ்சிய பொருளை ஆங்கிலப் பள்ளிகள், மருத்துவ நிலையங்கள், ஆங்கிலச் சுவடி நிலையம், நாம்புக்கிட்டி நூற்பந்தாட்டப் பந்தயங் (Badminton Tournaments)கள் முதலியவற்றில் செலவழிப்பது கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைத்தல் போலன்றோ? இவை நற்செயலே யெனின் இறைநெறிச் செயலைவிட உயர்ந்ததாகுமா? மறை ஞானசம்பந்தர் சிவதருமோத்திரத்தில்,

> "ஒப்பிலி அனாதி முத்தன் ஓதிய வேதத் துள்ளுஞ்
> செப்பிய சிவதன் மங்கள் சிறந்தநே ரியவே தேறுந்
> தப்பிலாப் பலத்தி னாலே தடவரை நிகா சான்றோர்
> வைப்பென விவற்றைக் கொள்வர் மகற்பல வாஞ்சை யாலே"

என்றபடி ஏனைய அறங்களினும் இறையறமே மேம்பட்ட தாகவின் மேற் கூறிய செயல்கள் வேறு வகையில் பொருளீட்டிச் செயற்குரியனவன்றோ? திருக்கோயிலில் எஞ்சிய பொருளைக் கொண்டு இறை நெறிப் பள்ளிகளை ஏற்படுத்தவும், பிரசாரஞ் செய்யவும், இடிந்து பாழாகின்ற ஏனைய சிறந்த கோயில்களைக் கட்டவும் ஏன் செலவழிக்கக் கூடாது? அன்பர்களே! பொருளுள்ள கோயில்களில் நடக்கும் இத்தகைப் பொருந்தாச் செயல்களை இளைஞர்களாய நாம் கூர்ந்து நோக்கிக் கூடியவரை நம் நெறிவழியில் திருப்பி விடல் நங்கடனன்றி வேறு யார் கடனும்? ஆதலின் நாம் காப்புக் கட்டிக் கொண்டு ஆங்காங்கு நடப்பவைகளை யெல்லாம் வெளிப்படுத்தி யாவரும் அறியும்படி செய்தல் முதலில் புரியவேண்டிய தொண்டாகும். இரண்டாவதாக உண்ணா நோன்பினால் அமண் பாழியை இறையோன் கோயிலாக்கிய அப்பரடிகளைத் தொடர்ந்து சென்று வெல்வது முறையாம்.

ஆறுவதாக நம் பெரியார் ஏற்படுத்திப் பெருமுயற்சியுடன் நடத்திவருகின்ற மகாசமாஜத்தையும் அதன் அருந் தொண்டுகளையும் பரவச் செய்ய முன்னணியாக விருக்க வேண்டியோர் நாமென்பதை மறந்துவிடக்கூடாது. அதற்காகத் திங்களொன்றிற்கு நூறு ரூபாய்க்குமேல் வருமானமுடையவர்களையும் ஐந்து வேலிக்குமேல் நிலமுடைய நம்மவர்களையும் விடாது தொடர்ந்து நம் சமாஜ அங்கத்தினராக்குதலும், ஏனையோர்களில் பற்றுடையவர்களைப் பணியாளராக்குதலும், ஜில்லாவிற் கொன்றாக முதலிலும் தாலுக்காவிற்கொன்றாகப் பின்னரும் கிளைச்சங்கங்களை ஏற்படுத்துதலும், நம் சமாஜ வெளியீடுகளைப் பரவச்செய்தலும், அவைகளை விரைவில் வெளியிடுவதற்கான தொண்டுகளைப் புரிதலும், துறவிகளையும் இத்தொண்டுகளில் ஈடுபடுத்தலும், ஆங்காங்குள்ள கோயில்களின் வரலாறுகளைச் சுருக்கியெழுதி வெளிப்படுத்தலும், இன்னோரன்ன பலப்பல வழிகளில் உழைப்பதும் நமது கடமையேயன்றோ?

கடைசியாக நாம் யாவரும் விடாது பின்பற்ற வேண்டியது ஒன்றுண்டு. 'எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே' என்றபடி 'சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே

தவமாக்குவோ'மாக. எது நேரினும் நேருக. நின்னிணையடிகள் மறவாத் மனமொன்று மாத்திரம் எனக் கடைதல் வேண்டுமாசே என்னும் வேண்டு கோள் எப்பொழுதும் நமதுள்ளத் துதிப்பதாக. போ வொழியாப் பிரிவிலா மானாவின்ப மாகடலை எப்பொழுதும் வாயார வாழ்த்தி மனமாரச் சிந்திப் போமாக. உன்னை மறந்திடுவேனே, மறப்பறியேன், மறந்தால் உயிர்விடு வேன், கணந்தரியேன், என்னுணையிது என்று உறுதி கூறுவோமாக. இவ் வாறு யாவற்றையும் பேச்சு முறையோடு நிறுத்தாது நடைமுறைக்குங் கொண்டுவந்து உடம்பினைப்பெற்ற பயனை அடைவோமாக.

"வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவ வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக வுலக மெல்லாம்"

திருவாலவாயுடையார் திருவடிகளே சரணம்.

# "சம்பந்தரும் ஜோதிடமும்"

[கயப்பாக்கம் - சோமசுந்தரம் செட்டியார்]

சித்தாந்தம் மலர் 5, இதழ் 1, பக்கம் 16-ல் மேற்குறித்துள்ள தலைப் புடன் ஸ்ரீமதி ஈ. த. சொக்கம்மாள் B. A., L. T. அவர்களா லெழுதப் பட்டும் பிறர்களால் பிற அபிப்பிராய பேதங்கள் காணப்பட்டுமுள்ள கோளறு திருப்பதிகத்தின் 2-வது செய்யுளின் ஆராய்ச்சியைக் கண்ணுற் றேன். அச்செய்யுளுக்கு அவ்வளவு கஷ்டத்துடன் வலிந்து பொருள் கொள்ளவேண்டிய அவசிய மின்றென்பது, திரு. கயப்பாக்கம் - சதாசிவ செட்டியார் B. A. அவர்கள் ஷை செய்யுளுக்கு அகத்தியர் தேவாரத் திரட் டில் எழுதியிருக்கும் உரையைப் பார்க்க இனிது விளங்கும். நிற்க.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் பாண்டி நாட்டிற்கு யாத்திரை யாகப் புறப்பட்ட நேரமானது சுபகரமானதாக வில்லாததால் அவருட னிருந்த அப்பமூர்த்திகள் அவர் பிரயாணத்தைத் தடுத்தார்கள். அப்போது நமது ஞானசம்பந்தப் பெருந்தகையார் ஷை கோளறு திருப்பதிகத்தை அவ்விடத்தி லருளிச்செய்தார்கள் என்பது யாவருக்கும் தெரிந்த விஷயம். அப்பதிகத்தில் பொதுவாக நாள்களும் கோள்களும் சிவனடியாரைத் துன் புறுத்தமாட்டா என்றும், சிறப்பாக இந்த 2-வது செய்யுளில் பிரயாணத் துக்கு சோதிட நூல்களில் விலக்கப்பட்ட முக்கியமான நாள்களாகிய ஐந் தையும், அவற்றோடு சேர்த்தெண்ணப்படுவனவாகிய பிற 7 நாட்களையும் 'உடனாய நாட்கள்' என்றும் கூறப்பட்டுள்ளன. திரு. செட்டியாரவர் கள் உரை வருமாறு:— * * * "ஒன்பது=ஒன்பதாவது நாளும், ஒன்பதொடொன்று=பத்தாவது நாளும், ஒன்பதொடேழு=பதினாறாவது நாளும், பதினெட்டு=பதினெட்டாவது நாளும், ஆறு=ஆறாவது நாளும், உடனாகிய நாட்கள்=இவற்றோடு சேர்த்தெண்ணப்படும் நாட்களும் * * *.

பிரயாணத்திற்கு ஆகாதனவாய நாட்கள் அடியார்க்கு நல்லனவென்பது கூறப்பட்டது. அவை: பரணி, கார்த்திகை, திருவாதிரை, ஆயிலியம், மகம், பூரம், சித்திரை, சுவாதி, விசாகம், கேட்டை, பூராடம், பூரட்டாதி என்பனவாம். 9-வது (அசுவனியிலிருந்து எண்ண) ஆயிலியம், 10-வது மகம், 16-வது விசாகம், 18-வது கேட்டை, 6-வது திருவாதிரை, உடனாகிய நாட்கள் பிற எழு நாட்கள்=பிற எழு நாட்கள்.'' இவ்வாறன்றிப் பலபடியெண்ணுவோர் எண்ணிய தெய்தாது இடர்ப்படுவரென்க.

[குறிப்பு :—இவ்வாராய்ச்சி இதோடு முடிவுறும்.—பத்திராசிரியர்.]

# பெரிய புராணத்தில் இடைச் செருகல்கள் எவை?

[தி. கு. கி. நாராயணசாமி, திருச்சிற்றம்பல இல்லம்]

(கிழக்கு மருதூர், திருநாம நல்லூர் தபால்)

"மெய்யோ டேபொய்யும் விரவிடு மாறுபன் னூலுட்
கைய ராபவர் பலநுழைத் தாரவை கணித்தே
ஐய நீக்குத லரிதரி தே"
—குமாரகுருதாச சுவாமிகள்.

இவ்வினாவைப்பற்றி இலக்கண விளக்க ஆசிரியர் பரம்பரை - சோமசுந்தர தேசிகர் அவர்கள் விரிவாக 'செந்தமிழ்' 17, 20 ஆவது தொகுதிகளிலுஞ் சுருக்கமாகக் 'குமரன்' திங்கள் வெளியீட்டின் 2 ஆவது சதங்கையிலும் எழுதியுள்ளார்கள். திருவாளர் கா. சுப்பிரமண்யம் பிள்ளை M.A., M.L., அவர்கள் 'சேக்கிழார் சரித்திர ஆராய்ச்சி நூலில்' திருத்தொண்டர் புராணத்தின் செய்யுட்கள் ௪௨௫௩ரேயாமென உமாபதி சிவாசாரிய சுவாமிகள் வரையறுத்திருப்பவும், இப்பொழுதுள்ள பதிப்புகள் சிலவற்றில் ௪௨அ௬ பாக்களும் சிலவற்றில் ௪௩0௩ செய்யுட்களுங் காணப்படுகின்றன. இதற்குக் காரணம் திருமலைச்சிறப்பு, கண்ணப்ப நாயனார் புராணம் முதலிய சில பகுதிகளில் வெள்ளியம்பலத் தம்பிரான் முதலிய பிற்காலத்துப் புலவர்கள் தம்முடைய பாடல்களைச் செருகினமையே என்று தெரிகிறது. அவற்றை வேறு பிரித்துவிட முயல வேண்டும்' (பக்கம் எ௪) என எழுதியிருக்கிறார்கள். கோவை. C. K. சுப்பிரமண்ய முதலியார் B. A., B. L., அவர்கள் சென்னைப்பல்கலைக்கழக பெரியபுராணப் பிரசங்கத்தில் '45 பாடல்கள் இடைச்செருகலாகச் சேர்ந்திருக்கின்றன. திருப்புறம்பயம் கல்வெட்டுகளால் இவை நன்கு தெரிகின்றன' என்று கூறியதாக 'சித்தாந்தம்' மலர் ௩, இதழ் ௪, பக்கம் அஅ-ல் தெரிகிறது. பிள்ளை அவர்கள் கணக்கிட்ட 45 யாவை என்பதையும், கல்வெட்டின் சாசன எண்ணையும் தெரிவிக்கவில்லை. அவற்றை அவர்களே தெரிவித்தால் தமிழுலகிற்கு அளப்பரும் நன்மையாகும். இவ்வினா குறித்து சமாஜ ஆராய்ச்சிக் கழகமும் ஏனைய ஆசிரியர்களும் புராண வல்லுநர்களும் தங்கள் கருத்தை வெளியிடு

மாறு பணிவுடன் வேண்டுகிறேன். இவற்றின் முடிவுகளை வரும் பெரிய புராணப்பதிப்பில் பல சரித்திரங்களின் கல்வெட்டுக் குறிப்புகள் (foot notes), மேற்கோள்கள் (reference) இவையன்னவற்றோடு பதிப்பிக்க ஆர்வங்கொண்டு தகுந்த ஏற்பாட்டை மேற்கொண்டுள்ளேன். இப்பணியில் எல்லோரும் பங்கெடுத்துக்கொண்டு விடை இறுக்கவேண்டுகிறேன். விடை இறுப்பவர்கள் பின்வரும் குறிப்புகளை கவனிக்கவும்.

க. பாடற்றொகை கூறும் சேக்கிழார் புராணப்பா வருமாறு :—

காண்டமிரண் டாவகுத்துக் கதைப்பாப்பைத் தொகுத்துக்
கருதரிய சருக்கங்கள் பதின்மூன்று நிலையிட்
டண்டுரைத்த புராணத்திற் றிருவிருத்த நாலா
யிரத்திருநூற் றைம்பத்து மூன்றாக வமைந்துச்
சேண்டகைய திருத்தொண்டர் புராணமெனப் புராணத்
திருமுறைக்குத் திருநாமஞ் சீர்மைபெற வமைத்திட்
டாண்டகைமை பெறவெழுதி மைக்காப்புச் சாத்தி
யழகுபெறக் கவளிகையும மைத்ததில் வைத்ததன்பின் (ருங)

பாடல் சஉஅகூ௩ே என்பார் எடுத்துக்காட்டும் தொண்டை மண்டல சதகச் செய்யுள் வருமாறு :—

"கொண்டறவழ் தண்டலைசூழ் குன்றநகர்ச் சேக்கிழா
ரொண்டாணி யோருய்ப வோதினா—தண்டலில்சி
சேன்றபுகழ் நாலா யிரத்திருநூற் றெண்பத்து
மூன்று திருவிருத்த மும்"

பின் செய்புளில் நூற்பெயரில்லாது ஆசிரியர் பெயர் வந்துளது. இவ் வாசிரியர் வேறு நூல் இயற்றாததால் பெரிய புராணமெனக் கொள்ளலாம். எண்பத்து - என்பதை ஐம்பத்து என்று மாற்றினால் பொருந்துகிறது.

உ. காண்டம் இரண்டாக வகுப்பதற்கு, வித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை அவர்களியற்றிய சேக்கிழார் பிள்ளைத்தமிழ் முதற் செய்புளில் 'உலகெலாமெனுஞ் சுருதி காப்பண்ணு மீற்றும் பொருத்தி' என்றமையால் திருஞானசம்பந்தர் புராண 216 ஆவது செய்புள் இரண்டாம் காண்டத்திற்குக் காப்புச் செய்யுளாகக் கொள்ளவேண்டுமென்ற கொள்கை சரியா? மேற்சுட்டிய சிகைச்செய்யுளை (புராணத்தின் ௪கஉஎ-வது செய்புள்) ஆதாரமாகக்கொண்டு முன் பின் கூட்ட, நீக்க முற்படுவது தகுதியா? 'உலகெலாம்' என்ற சொல்லை காப்பண்ணில் பொருத்தி என்றது அளவையிலா? முகமனாகவா?

௩. சருக்கங்களின் ஈற்றிலுள்ள சுந்தரமூர்த்தி சுவாமிகள் வணக்கம் ஓலைகளில் எண்ணப்படவில்லை என்பதை ஏற்கவேண்டியதுதானா? அப்படி ஓலைகளில் வணக்கச் செய்யுளை எண்ணாது விடுத்த சுவடிகள் உண்டா? அச் சுவடியில் அகச்சான்று நாம் எடுத்துக் காட்டமுடியுமா? 'ஒவ்வொரு புராண இறுதிச் செய்புளில் இன்னபுராணம் கூறுவாம் என்று சருக்கத்தை முடிக்கும்போது இத்துதிச் செய்யுளைக் கூட்டுவது முறையாகாது' என்றது

ஒப்பமுடிந்ததா? இவ்வினு உடன்பாடென்ருல் பின்வரும் செய்யுட்களைக் கழிக்கவேண்டி வருகிறது. 1 அமர்நீதி புரா-(49-மலர்மிசை); 2 ஆனுயர் புரா-(42-திருகொள்); 3 சண்டேசுரர் (சுo-நேச நிறைந்த; 4 நமிநந்தி (ந௩-நாட்டார்); 5 சோமாசி (௩-பணியுந்); 6 கூற்றுவர் (௩-தேனுங்குழ லும்); *7 ஐயடிகள் (௩-உளத்தில்); 8 முனையடுவார் (எ-செறிவுண்); 9 கோட்புலி (க௩-மேவரிய); 10 அப்பானுமடி-(உ-செற்ருர்.)

௪. பின்வரும் பாடல்கள் முன் பின் செய்யுட்களுக்குத் தொடர்பில்லையென்பது உடன்பாடா?

i. கண்ணப்பநாயனுர் புராண (†கருள முதல் க௩௪ வரை) அவனுடைய, பொருப்பினில், உருகியவன், இம்மலை, வெய்ய ஆகிய ‡5 செய்யுட்கள்.

ii. திருஞானசம்பந்தர் புராண (உ௬உ) மறையவர்; (உ அஉ, உ அ௩, உ அ௪) அத்திருமூதூர், சின்னந்தனி, சங்கநாதம்; (௩ அ௪ முதல் ௩ அஅ) மகிழ்ந்த, தண்புனற், அறன்மலி, நீணிலை, மயிலொடுங்; (எ௩அ) நோக்கிட; (அ௯உ முதல் அ௪௫) வேள்வி நற்பயன், முதல் அலரும் விரைசூழ் வரை ஆகச் செய்யுள் 1+3+5+1+24)=34.

iii. ஏயர்கோன் கலிக்காமர் புராணத்தில் (௩௩) மானுமயனும், (௩௪) தூய மணி, இவற்றின் இடையில் 'ஆண்டநம்பி' செய்யுள், இது நாவலர் பதிப்பில் இல்லை.

௫. நாவலர் பதிப்பில் அடிக்குறிப்பில் (Foot notes) உடுக்குறி இட்டு, பின்வரும் செய்யுள்கள் சில பிரதிகளில் காணப்படவில்லை என்று காட்டுகிருர்கள். திருஞானசம்பந்தர் (அ௪௪) வெறியோர்; (௬௩௩) திருச்சின்னம்; சாக்கிய நாயனுர் (க௩, க௪) இந்நியதி, கல்லாலே ஆக இந்நான்கு செய்யுளில் அ௪௪ செய்யுள் மட்டும் செருகலெனமேல் பத்தியில் தள்ளப்பட்டதைச் சிந்திக்க.

௬. கா. சுப்பிரமண்யப் பிள்ளை அவர்கள் திருமலைச் சிறப்பில் செருக விருப்பதாக மேலே கூறி இருக்க தேசிகர் அவர்கள் அப்பகுதியில் செருக விருப்பதாக எடுத்துக் காட்டவில்லை.

எ. பின்வரும் 17 பாடல்கள் பழைய ஏட்டுச் சுவடியிலிருப்பதாகத் தேசிகர் சுட்டுகிருர். இவை இற்றைய பதிப்பில் இல்லை.

i. தடுத்தாட்கொண்ட புராணம் (க௬o) 'அடியவர்க்கடியனுவேன்' என்ற செய்யுட்குப்பின் ‖16 செய்யுள் விடுபட்டிருக்கிறது.

---

* இதை தேசிகர் நீக்கவில்லை. காரணமும் தெரியவில்லை.

† இங்கு காட்டப்படும் எண் நாவலர் பதிப்பின் எண்கள்.

‡ திருமயிலை சுப்பராய ஞானியார் பதிப்பில் இல்லை.

‖ வன்ருெண்டர் காதல் கண்டு மழவிடை யுடையார்: தாமு

ii. (உ0க) செய்யுளின் ஈற்றடி 'பதிகமருள் செய்வாய்' என வந்து பின் *அப்பெரியார் என்ற செய்யுள் வருகிறது. இந்த 17 பாடல்களும் நடையில், வரலாற்றில் இயைவதாயிருக்கிறதா என்பதை நாம் ஆராயவேண்டும்.

இவ்வேழு குறிப்புகளையும் பிறவற்றையும் கொண்டு சித்தாந்தத்தில் விடை இறுக்குமாறு வேண்டுகிறேன். விடை இறுப்போர் குறிக்கும் செய்யுள் எண் நாவலர் பதிப்பாயிருப்பது நலம். வேண்டுவனவற்றிற்கு எனக்கு எழுதுக.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினுமப் பொருண்
மெய்ப்பொருள் காண்பதறிவு."

முன்னொண்ட ராக வாண்ட முதனம்பி யாரு ரற்குச்
சென்றங்குப் போற்று மிக்க திருத்தொண்டர் தம்பாற் சேர
வென்றும்பண் பருள வேண்டி யொருதொண்டர் வெருளச் செய்தார். 1

பெருந்தவத் தொண்ட ரான பெருவிறன் மிண்ட ரன்பா
ரிருந்தவக் குழாத்தி னின்று மெதிர்செயிர்த் தெழுந்து நின்ற
வருந்தவப் பெரியோர் தம்மைப் பணிந்தணை யாது போன
வருந்தவ னுடைய வேட மற்றிவ னார்கொ லென்று. 2

வேறு

பக்க மேவரு வார்கள் பலருடன்
புக்க போது பொருவிறன் மிண்டர்தா
மிக்கெழுந்த வெகுளியானம்பி பாற்
றக்க வல்லன சாலவுஞ் சொல்லினர். 3

சொன்ன தொண்டரை நோக்கிமெய்த் தொண்டரான்
மன்னி நீடு வர்பெருங் கூட்டத்து
முன்னி ருந்தா ரொருவர் மொழிகின்று
ரின்னல் சொல்ல வியல்பல்ல வாமென்று. 4

ஓல காட்டி யுடையவர் முன்னின்று
ஞால மேற்க வாட்கொண்ட நம்பியைச்
சீல முன்பறி யாதிவை செப்பினீர்
கோல மேகண்டு கூறலா மேரவென்றார். 5

என்று கூற விகழ்ந்து விறன்மிண்டர்
நன்று சாலவு நம்பெரு மக்கள்வந்
தொன்று கூட்ட முணரா வொருவனை
மன்று தம்பிரா னுள வழக்கில. 6

கருத்த டங்கண்ணி பாகர்தங் காதலு
ழருத்த வத்தடி யாரை யணைவின்றி

---

* அப்பெரியார் சிவனருளா லனவிறந்த கருணையா
யொப்பரிய வாரூரன் பிரானுத லுனதாமென்
றிப்பரிசக் கினிதிருக்கை சாற்றுமென வெழுந்தவா
மெப்புவனங் களுமுவப்ப வெழுந்தவொலி கேட்டனரால்.

புரிந்த பண்பினிற் றூர்த்தன் புறகெனா
விருந்த தொண்ட ரிருக்கை சார்தலும். 7

வெம்பி நீர்மொழி யேல்விறன் மிண்டரோ
நம்பி யாரூரர் காணுமர் நாயனா
ரம்பொன் மாளிகை யாரு ரமர்ந்தரு
டம்பி ரான்றோழ னாரவர் தாமென. 8

தோழ ராகினுந் தொண்டரே யாகினு
மாழி மாலயன் காணா வருட்கழல்
சூழு மெய்யடி யாரைத் தொடர்வின்றி
வாழு மூரன் பிரானாதல் வைத்திலம். 9

இன்ன வாறடி யார்புற கென்றபி
னன்ன வாறறிந் தஞ்சியா ரூரர்தா
மின்னு வார்சடை வேதியன் றாடொழப்
பொன்ன வாமணி பூங்கோயில் சார்தலும். 10

பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவ
ரங்கு காட்சி கொடுத்தரு ளாமையி
னிங்குப் பேறெனக் கிவ்வண மோவென்பா
ரெங்குந் தேடி யழிவுற் றியம்புவார். 11

என்னை யாட்கொண்ட வீசனு மாயெனக்
கன்னை யாயமு தாயறி வாயினாய்
பொன்னை யார்ந்த புரிசடைப் புண்ணியா
வுன்னை யானிங்குக் காணே னொளித்தியோ. 12

வெள்ள நீர்பரிந் தோங்கும் விரிசடை
வள்ள லேமலை யாண்மண வாளனே
தள்ளு மாமறை யின்றெளி வாகியெ
னுள்ள மேபுகுந் தாயெங் கொளித்தியோ. 13

ஈசனே யெனக் கெய்ப்பினில் வைப்பெனப்
பேச லாகும்நம் பெரும்பொரு ளாயினாய்
தேச னேசிவ னேசிவ லோகனே
யோசை யேயுனை யானுண ரேனென்று. 14

தோழ ராகிநற் சுற்றமு மாயடி
நீழ றந்தளிப் பாரெதிர் நீங்கவு
மாழி போன்ற வடியார் முனியவும்
வாழ வன்றொண்டர் சால வருந்தினார். 15

வேண்டி யாட்கொண்ட வீறு தொண்டரை
யாண்ட நாயகர் வாவென் றருள்செய்து
காண்ட கும்படி காட்சி கொடுத்தலும்
பூண்டு கொண்டவன் பொன்னடி போற்றுவார். 16

# திருவகுப்பு

முருகப்பெருமான் திருவருள் கைவரப்பெற்றுப் பதினைரும் நூற்றாண்டில் திகழ்ந்தவரும் சிவாநுபூதிச் செல்வருமாகிய அருணகிரிநாத சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய 'திருவகுப்பு' என்னும் அரிய நூலுக்கு, எனது தமிழ்ப்போதகாசிரியர் ஒருவர் குறித்து வைத்த குறிப்புக்கள் எனக்குக் கிடைத்தன. அவைகளைச் செப்பனிட்டு "சித்தாந்தம்" வாயிலாக வெளியிடத் துணிந்தேன். பின்னர் இது புத்தக ரூபமாய் வெளிவரும். இவ்வுரையில் காணும் குற்றங்களைத் தமிழ்ப் பேரறிஞர் இப்பத்திராசிரியர் அவர்கட்கு எழுத வேண்டுகிறேன்.

[பேயர் விழையான்]

## கடைக்கணியல் வகுப்பு

(a) அலைகடல் வளைந்து டுத்த வெழுபுவி புரந்தி ருக்கு
மாசென நிரந்த ரிக்க வாழலாம்
(b) அளகைய ர சன்ற னக்கு மமரா சன்ற னக்கு
மாசென அறஞ்செ லுத்தி யாளலாம்
(c) அடைபெறுவ தென்று முத்தி யதிமது ரசெந்த மிழ்க்கு
மருள்பெற நினைந்து சித்தி யாகலாம்
(d) அதிரவரு மென்று முட்ட அலகில்வினை சண்டை நிற்க
அடலெதிர் புரிந்து வெற்றி யாகலாம். (௧)

(e) இலகிய நலஞ்செய் புட்ப கமுமுட னிறம் வெளுத்த
இபவர செனும்பொ ருப்பு மேறலாம்
(f) இருவரவர் நின்றி டத்து மெவரொவ ரிருந்தி டத்து
மொருவனிவ னென்று ணர்ச்சி கூடலாம்
(g) எமபடர் தொடர்ந்த ழைக்கி லவருட னெதிர்ந்து ளுட்க
இடியென முழங்கி வெற்றி பேசலாம்
(h) இவையொழிய வும்ப லிப்ப தகலவிடு முங்கள் வித்தை
யினையினி விடும்பெ ருத்த பாருளீர். (௨)

(i) முலையிடை கிடந்தி ளைப்ப மொகுமொகென வண்டி ரைப்ப
முகையவிழ் கடம்ப டுத்த தாரினன்
(j) முதலிபெரி யம்ப லத்துள் வரையசல மண்ட பத்துண்
முநிவர்தொழ வன்று நிர்த்த மாடினன்
(k) முனைதொறு முழங்கி யொற்றி முகிலென விரங்க வெற்றி
முறைநெறி பறந்து விட்ட கோழியான்
(l) முதியவுண ரன்று பட்ட முதியகுடர் நன்று சுற்று
முதுகழுகு பந்த ரிட்ட வேலினன். (௩)

(m) மலைமருவு பைம்பு னத்தி வளருமிரு குன்ற மொத்தி
வலிகுடி புகுந்தி ருக்கு மார்பினன்
(n) மழலைகள் விளம்பி மொய்த்த அறுவர்முலை யுண்டு முற்றும்
வடிவுடன் வளர்ந்தி ருக்கும் வாழ்வினன்

(o) மலையிறை மடந்தை பெற்ற வொருமதலை யென்று நித்த
மலையிடிய வுந்து ணித்த தோளினன்

(p) மயிலையு மவன்றி ருக்கை யயிலையு மவன்க டைக்க
ணியலையு நினைந்தி ருக்க வாருமே. (௧)

அலைகடல் - அசையா நின்ற கடலானது ; வளைந்து - சுற்றியுள்ள ; எழுபுவி - எழுலகங்களையும் ; புரந்திருக்கும் - காப்பாற்றிக் கொண்டிருக்கிற; அரசு என - அரசன் போல ; நிரந்தரிக்க - எக்காலத்திலும் ; வாழலாம் - வாழ்ந்திருக்கலாம் ; அளகை அரசன் தனக்கும் - குபேரனுக்கும் ; அமரர் அரசன் தனக்கும் - தேவேந்திரனுக்கும் ; அரசு என - மேலான அரசன்போல ; அறம் செலுத்தி - தருமத்தை நடத்தி ; ஆளலாம் - ஆண்டுகொண்டிருக்கலாம் ; முத்தி - மோக்ஷத்தை, அடைபெறுவது என்று - அடைவதற்குக் காரணமாமென்று, அதி மதுரம் - மிக்க இனிமை வாய்ந்த ; செந்தமிழுக்கும் - செந்தமிழ்ப் புலமையின் பொருட்டும் ; அருள்பெற நினைந்து - திருவருளைப் பெறக் கருதி ; சித்தி ஆகலாம் - சித்தியடையலாம் ; என்றும் - எந்நாளும் ; முட்ட - முழுதும் ; அதிரவரும் - அதிரும்படி வருகிற ; அலகு இல் - அளவில்லாத ; விளை - உண்டாகிற ; சண்டை நிற்க - சண்டையில் நிற்க ; எதிர் - (பகைவரை) எதிர்த்து ; அடல்புரிந்து - போர்புரிந்து ; வெற்றியாகலாம் வெற்றியடையலாம் ; (௨)

இலகிய - விளங்குகிற ; நலம் செய் - அழகைச் செய்கிற ; புட்பகமும் - புட்பக விமானமும் ; உடல் நிறம் வெளுத்த - உடம்பின் நிறம் வெளுத்த ; இப அரசு என்னும் - யானை யரசனென்கிற, (ஐராவதம்) பொருப்பும் - மலைமேலும் ; எறலாம் - ஏறியிருக்கலாம் ; இருவர் அவர் நின்றிடத்தும் - அவரிருவர் நின்றிடத்திலும் ; எவரெவர் இருந்திடத்தும் - எவரெவர் இருந்த இடத்திலும்; இவன் ஒருவன் என்று - இவன் ஒப்பற்றவனென்கிற ; உணர்ச்சி - கருத்து ; கூடலாம் - உண்டாகலாம் ; எமபடர் - யமகிங்கிரர் ; தொடர்ந்து அழைக்கின் - தொடர்ந்தழைத்தால் ; அவருடன் எதிர்த்து - அவரோடெதிர்த்து ; உள் உட்க - (அவர்) மனமுட்கும்படி ; இடியென முழங்கி - இடிபோல முழங்கி ; வெற்றி பேசலாம் - வெற்றி பேசலாம் ; இவை ஒழியவும் - இவை நீங்கவும் ; பலிப்பது - சித்திப்பதை, அகலவிடும் - நீங்க விடுங்கள் ; உங்கள் வித்தையினை - உங்கள் வித்தையை ; இனி விடும் - இனி விட்டு விடுங்கள் ; பெருத்த - பெரிதாகிய ; பார் உள்ளீர் - பூமியிலுள்ளவர்களே. (௩)

முல்லை - முல்லை யாலை ; இடைகிடந்து இளைப்ப - இடையே கிடந்து மெலிய ; மொகு மொகு என - மொகுமொகென்று ; வண்டு இரைப்ப - வண்டுகள் சப்திக்க ; முகை அவிழ் - முகை விரிந்த ; கடம்பு அடுத்த - கடப்ப மலரானியன்ற ; தாரினன். மாலையை யுடையவன் ; முதலி - முந்தி ; பெரியம் பலத்துள் - பேரம்பலத்தில் ; வரை அசல மண்டபத்துள் - மலைபோலும் அகன்ற மண்டபத்துள் ; முனிவர் தொழ - முனிவர் வணங்க, அன்று - அந்நாளில் ; நிர்த்தம் ஆடினன் - நடனமாடினவன் ; முனை தொறும் - போர் முகந்தோறும் ; முழங்கி - சத்தித்து ; ஒற்றி - ஒருமித்து, முகில் என இரங்க - மேகம் போல ஒலிக்க ; வெற்றி முறைநெறி - வெற்றி முறையின் மார்க்கமாக ; பறந்துவிட்ட - பறந்துபோன ; கோழியான் - சேவலையுடையவன் ; முதிய அவுணர் - பழைய அவுணர் ; அன்றுபட்ட - அந்நாளில் இறந்து பட்ட ; முதிய குடர் - முதிர்ந்த குடலானது, நன்று சுற்றும் - நன்றாகச் சுற்றிக்கொண்டிருக்கிற ; முது கழுகு பந்தரிட்ட - கிழக் கழுகுகள் பந்தல்போலக் கவிழ்ந்த ; வேலினன் - வேலாயுதத்தையுடையவன். (௪)

மலைமருவு - (வள்ளி) மலைகளிற் பொருந்திய; பைம்புனத்தி - பசும்புனத்தியாகிய வள்ளி நாயகியின் ; வளரும் - வளர்ந்த ; இருகுன்றம் ஒற்றி - இரண்டு (தனமாகிய) மலை

களால் ஒற்றப்பட்டு ; வலி குடிபுகுந்திருக்கும் - பலமானது குடி புகுந்திருக்கிற ; மார்பினன் - மார்பையுடையவன் ; மழலைகள் விளம்பி - மழலைச் சொற்கள் பேசி ; மொய்த்த- நெருங்கி வந்த ; அறுவர் முலையுண்டு - அறுவருடைய முலைகளைப் பருகி ; முற்றும் வடிவுடன் - முழுவுருவத்துடனே ; வளர்ந்திருக்கும் - வளர்ந்திருக்கிற ; வாழ்வினன் - வாழ்வையுடையவன் ; மலை இறை மடந்தை பெற்ற - மலையரையன் மகளாகிய உமா தேவியீன்ற ; ஒரு மதலை என்று உதித்து - ஒப்பற்ற புதல்வனென்று அவதரித்து ; மலை இடியவும் அணித்த - மலையிடியவும் பிளந்த ; தோளினன் - புயங்களையுடையவன் ; அவன் - அவனது ; மயிலையும் - மயிலையும் ; திருக்கை - திருக்காத்திலுள்ள ; அயிலையும் வேலையும் ; அவன் - அவனது, கடைக்கண் இயலையும் - கடைக்கண்ணினியலையும் ; நினைந்திருக்க - சிந்தித்துக் கொண்டிருக்க ; வாரும் - நீங்கள் வாருங்கள். (க)

கடைக்கண் இயல் வகுப்பு - சர்வலோக நாயகனாகிய முருகப் பெருமானின் கடைக் கண்ணின் நோக்கத்தினாலே அடியார்கள் பெறும் பேற்றினை எடுத்துக் கூறும் பிரிவு என்பது பொருள்.

குறிப்புகள். - (a) அலைகடல்...வாழலாம் (b) அளகையரசன்...யாளலாம் (d) அதிரவரு...யாகலாம் (e) இலகிய...ஏறலாம்:—1. முருகாவென உனை ஓதுந்தவத்தினர் மூதுலகில் - அருகாத செல்வமடைவார் வியாதியடைந்து நையார் - ஒரு காலமுந் துன்ப மெய்தார் பாகதியுற்றிடுவார் - பொருகாலன் நாடுபுகார் சமராபுரிப் புண்ணியனே. (சந்நிதிமுறை - கட்டளைக் கலித்துறை - 13) 2. உள்ளக் கவலையெலாம் ஒழிந்தேன் ஒழியாது செய்யுங் - கள்ளக் கருமங்கள் யாவும் விண்டேன் கலைவாணியுடன் - வள்ளக் கமல மலர்மாது தந்தருள் வாழ்வடைந்தேன் - தெள்ளத் தெளிந்தனன் போரூர் முருகனைச் சேவை செய்தே (சந்நிதிமுறை - அலங்காரம் 51.)

(e) அடைபெறுவ...சித்தியாகலாம் :—மொய்தாரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால் - வைதாரையும் அங்கு வாழவைப்போன் வெய்யவாரணம் போல் - கைதானிருபது உடையான் தலைபத்துங் கத்தரிக்க - எய்தான் மருகன் உமையாள் பயந்த இலஞ்சியமே (கந்தரலங்காரம் 22.)

(f) இரவாவர்...கூடலாம் :—1. உலகத்தொரு மீயாகத் தோன்ற விழுமிய - பெறலரும் பரிசில் (திருமுருகாற்றுப்படை (வரி 293 - 95.) 2. உனைப்புகழும் எனைப் புவியில் ஒருத்தனும் வகை திருவருளாலே (திருப்புகழ் 173.)

(g) எமபடர்...பேசலாம் :—1. வெட்டுங் கடாமிசைத் தோன்றும் வெங்கூற்றன் விடும்கயிற்றால் - கட்டும்பொழுது விடுவிக்க வேண்டும் (கந்தரலங்காரம் 65) 2. ஓலையுந் தூதருங்கண்டு திண்டாடல் ஒழித்தெனக்குக் - காலையு மாலையு முன்னிற்குமே கந்தவேள் மருங்கில் - சேலையுங் கட்டிய சீராவுங்கையிற் சிவந்த செச்சை - மாலையுஞ் சேவற் பதாகையுந் தோகையும் வாகையுமே (கந்தரலங்காரம் 27) 2. பட்டிக் கடாவில் வரும் அந்தகா உனைப்பாரறிய - வெட்டிப்புறங் கண்டாலதுவிடேன் (கந்தரலங்காரம் 64) 4. காலன் வெம்பி - வந்திப்பொழுது என்னை என் செயலாஞ் சத்திவாளொன்றினால் - சிந்தத் துணிப்பன் தணிப்பருங் கோபத்திரி சூலத்தையே (கந்தரலங்காரம் 69) 5. சாகாதெனையே சரணங்களிலே - காகா நமனார் கலகஞ் செயுநாள் (கந்தரனுபூதி 41) 6. அசைவற நினைபு மவர்பவ மகலவெ மேல்வருகால தூதரை உடையுமப்படி அங்கு மிங்குமெங்கு மோடத் துரந்தன (புயவகுப்பு.)

(i) முலையிடை...தாரினன்:—சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங்கடம்பும் (திருமுருகாற்றுப்படை. வரி 225) 2. பூக்குங் கடம்பா முருகா கதிர்வேலா (தனிச் செய்யுள்

3. அடவியில் விளவு தளவலர் அளவு குராமகிழ் கோடல் பாடல் அரிமுரல் செச்சை அலங்கல் செங்கடம்பு நேசித்து அணிந்தன (புயவகுப்பு) 4. கோடலும் மராந்தோடு குராவுஞ் செச்சையுஞ் சூடியகுமா (கந்தபுரா - உற்பத்தி - திருவிளை 69.)

(j) முதலி...ஆடினேன் :—அரிதுயில் சயன வியாள மூர்த்தனும் - அணிதிகழ் விரு புலியூர் வியாக்ரனும் - அரிதென முறை முறையாடல் காட்டிய பெருமாளே (திருப்புகழ் 650) 2. மதுராவாணி தானுட மலரில் வேதனுராட - மருவிவானுளோராட, மதியாட - வனசமாமியாராட - நெடியமாமனுராட - மயிலுமாடி நீயாடி - வரவேணும் (திருப்புகழ் 1056.)

(k) முனைதோறு...கோழியான் :—1. கோழிக் கொடியனடி பணியாமல் (கந்தாலங்காரம் 20) கோழிக்கொடியை நின்வேலை மயிலைக் குறித்தவரை - ஊழிக்கனலும் அணுகாதெனின் (சந்நிதிமுறை - கட்டளைக் கலித்துறை 12) 3. செந்நிறங் கெழீஇப சூட்டுச் சேவலங் கொடியொன்றாகி - முன்னுறு மனத்திற் செல்லு மூாண்தகு தடந்தேர் மீப்போய் - இந்நிலவரைப்பின் அண்டம் இடிபட உருமேறுட்க - வன்னியும் வெருவவார்த்து மற்றவணுற்றதன்றே (கந்த. சூரபன்மன்வதை 498.)

(l) மூதியவுணர்......வேலினுன் :—1. சலத்து வரும் அரக்கருடல் கொழுத்து வளர் பெருத்த குடர் சிவத்த தொடை எனச்சிகையில் விருப்பமொடு சூடும் (வேல் வகுப்பு) 2. மிடை குறள் வெங்கொடி கழுகு பருந்து விருந்தென ஊனுர்ந்தகல் வானுர்ந்தன (வேல்வாங்கு வகுப்பு.)

(m) மலைமருவு......மார்பினுன் :—1. திருத்திய புனத்திடை வனத்தழை உடுத்தினி திருப்பவள் விருப்புறு வரைப்புயன் (திருக்கையில் வழக்க வகுப்பு) 2. பெருத்தமர் செய்-பெருகானில் செலக்கருதி அறக்கொடிய சிலைக்குறவர் கொடித்தனது சிமிழ்த்ததன முறத்தழுவு பெருமாளே (திருப்புகழ் 1155.)

(n) மழலைகள்......வாழ்வினுன் :—1. முருகசர வணமகளிர் அறுவர் முலை நுகருமறு முககுமா காரணமென யருள்பாடி யாடிமிக (சீர்பாத வகுப்பு) 2. ஞாலமேத்த வழிபடும் ஆறு பேர்க்கு மகவென நாணல் பூத்த படுகையில் வருவோனே (திருப்புகழ் 1214) 3. முதல்வ பார்ப்பதி புதல்வ கார்த்திகை முலைகள் தேக்கிட உண்ட வாழ்வே (திருப்புகழ் 1061) 4. மறுவறு மாரலாகு மாதர் மூவிருவர் தாமும் - நிறைதரு சரவணத்தி னிமலனை யடைந்து போற்ற - உறுநர்கள் தமக்கு வேண்டிற் றுதவுவோனுதலாலே - அறுமுக வொருவன் வேறு யறுசிறு ருருவங் கொண்டான் (கந்த-உற்பதி. திரு அவதாரம் 116) 5. ஆறுரு வாதலோடு மறுவரு மகிழ்ந்து வேறு - வேறுதா மெடுத்துத் தத்தம் வியத்தகு துணைமென் கொங்கை - ஊறுபா லமுத மன்னேற் குதவலு முறுவல் செய்து - மாறிலா வருளா லாற்ற வருந்தினன் போல உண்டான் (கந்த-உற்பத்தி - திரு அவ-செய். 117) 6. தாரா கணமெனுந் தாய்மார் அறுவர் தருமுலைப்பால் - ஆரா தமைமுலைப்பாலுண்ட பாலன் (கந்தாலங்காரம் 81) 7. சாவணப் பூம்பள்ளியறைத் தாய்மார் அறுவர் - திருமுலைப்பாலுண்டான் (சிலப்பதிகாரம் குன்றக்குரவை.)

(o) மலையிறை மடந்தை பெற்ற ஒரு மதலை :—1. யாமளை மணக்குமுக சாமளை மணிக்குயிலை ஆயென அழைத்துருகு நேசக்காரனும் (திரு வேளைக்காரன் வகுப்பு) 2. காவேந்திய பைங்கிளி மாசாம்பவி தந்தவன் (தேவேந்திரசங்க வகுப்பு) 3. மலைமகண் மகனைநின் மதிநுதன் மடவால் (சிலப்பதிகாரம் - குன்றக்குரவை.)

(p) மயில் :—அருமையிலை ஒருபொருளுக் கடிமையிலை பிறருக்கு அந்தகனுக்கு ஆண்மையிலை அடியேன்பால் வருதற்கு - எருமையிலை சிறுமையிலை இன்மையிலை பகைஞர்க்கு எளிமையிலை மடமையிலை இழிதகைமையிலை நோய் - பொருமையிலை வறுமையிலை பொய்ம்மையிலைப் பிறவிப்புன்மையிலை தீமையிலை பொருமையிலை மகவான் -

தருமயிலை வனமயிலை மணந்த திருத்தணிகைச் சண்முகனூர் உவந்தேறுந் தனிமயிலைத் தொழுவே ; (திருத்தணிகைப் புராணச் சுருக்கம்.)

**அவன் திருக்கை அயில் :**—1. சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண் குன்றம் - ஏரகமும் நீங்கா இறைவன் கைவே லன்றே - பாரிரும் பௌவத்தின் உள்புக்குப் பண்டொரு நாள் - கார்மா தடிந்த சுடரிலைய வெள் வேலே. 2. அணி முகங்கள் ஓராறும் ஈராறு கையும் - இணையின்றித் தானுடையான் ஏந்திய வேலன்றே - பிணிமுக மேற் கொண் டவுணர் பீடழியும் வண்ணம் - அணி விசும்பிற் கோன் ஏத்த மாறட்ட வெள் வேலே. (சிலப்பதிகாரம் - குன்றக்குரவை)

**அவன் கடைக்கணியல் :**—1. முடியாப் பிறவிக் கடலிற் புகார் முழுதுங் கெடுக்கும் - மிடியாற் படியில் விதனப் படார் வெற்றிவேற் பெருமான் - அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப் - பொடியாக்கிய பெருமாள் திருநாமம் புகல்பவரே. (கந்தரலங்காரம் 33.) 2. மருள்கெழு புள்ளே போல வந்திடு சூரன் எந்தை - அருள்கெழு நாட்டஞ் சேர்த்த வாங்கவன் இகலை நீக்கித் - தெருள்கெழு மனத்த னாகி நின்றனன் சிறந்தார் நோக்கால் - இருள்கெழு கரும்பொன் செம்பொன் னாகிய இயற்கையே போல். 3. தீயவை புரிந்தா ரேனுங் குமரவேள் திருமுன் உற்றால் - தூயவ ராகி மேலைத் தொல்கதி யடைவ ரென்கை - ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசமர் இந்நாட்செய்த - மாயையின் மகனுமன்றோ வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான். (கந்த - யுத்த - சூரபன்வதை 495, 496.)

**வாருமே :**—காகமுறவு கலந்துண்ணக் கண்டீ ரகண்டா காரசிவ - போகமெனும் பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய் - ஏகவுருவாய்க் கிடக்குதையோ இன்புற்றிட நாமினியெடுத்த - தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாருஞ் செகத்தீரே. (தாயுமானவர் பாடல்) முகையவிழ் கடம்பயெடுத்த தாரினனும் (j) முனிவர் தொழ அன்று நிர்த்தமாடினனும் (k) பறந்துவிட்ட கோழியானும் (l) கழுகுபர்தரிட்ட வேலினனும் (m) வலிகுடிபுகுந்திருக்கு மார்பினனும் (n) வளர்ந்திருக்கும் வாழ்வினனும் (o) மலையிடியவுந் அணித்த தோளினனும் ஆகிய முருகப்பெருமான் மயிலையும், அயிலையும் கடைக்கண் இயலையும் நினைந்திருக்க (p) நிரந்தரிக்க வாழலும் (a) அறஞ்செலுத்தியாளுதலும் (b) சித்தியாதலும் (c) வெற்றியாதலும் (d) இபவாசெனும் பொருப்பு ஏறுதலும் (e) உணர்ச்சி கூடுதலும் (f) முழங்கு வெற்றி பேசுதலும் வரும் (p) என்று இயைத்துப் பொருள் கூறுதலும் ஒன்று. வரும் என்பது வாரும் என நீட்டும்வழி நீட்டல் பெற்றது.

---

## மதிப்புரைகள்

"**கலைமகள்**" :—மதராஸ் லாஜர்னல் ஆபீசு, மயிலாப்பூர்—வருடச்சந்தா ரூபா 4. நிர்வாக பத்திராசிரியர் - டி. எஸ். இராமச்சந்திர ஐயர். இப்புதிய தமிழ் மாதப்பத்திரிகைக்கு நல்வரவு கூறுகின்றோம். ஆங்கிலத்தில் "மாடர்ன் ரெவியூ" என்ற இந்தியப் பத்திரிகையைப் போல் தமிழில் ஓர் உயர்தர மாதப்பத்திரிகை எப்போது தொடங்கப்படுமென்று நாம் பல வாண்டுகளாக எதிர்பார்த்ததுண்டு. இவ்வாண்டிலேயே அத்தகைய பத்திரிகையின் தொடக்கம் நமக்குப் பெரும் பாக்கியமாகக் கிடைத்தது. இப்பத்திரிகையில் சமயம், மொழி, அரசியல், அறிவியல், ஓவியம், நாடகம் முதலிய பற்பல துறைகளிலும் அறிவைப் பெருக்கும் விஷயங்கள் வெளிவருகின்றன. பல சித்திரப்படங்கள், போட்டோ படங்கள் முதலியன கட்டுரைப் பெருள்களைக் கண்முன் கொணர்கின்றன. தமிழ்நாட்டிலுள்ள தமிழ்ப்பேரறிஞர்களெல்லாம் கட்டுரைகள் உதவ முன்வந்துள்ளார்கள். தமிழ் மக்கள் இப்பத்திரிகையை வாங்கி ஆதரிக்கும் முதற்கடமையில் ஈடுபடுவார்களாக.

"**திருவருட்பா**" :—அடக்கவிலைப்பதிப்பு - உ, ௩, ௪-ம் பகுதிகள் : இராமலிங்க சுவாமிகள் திருவருட்பாவையும், பல பகுதிகளாக அடக்கவிலைக்கு வெளியிடவேண்டுமென்ற எண்ணம் இத்தமிழ்நாட்டின் தவப்பயனால் திரு. ஆ. பாலகிருஷ்ண பிள்ளையவர்கட்கு உதித்தது. சென்ற ஆண்டுத் தொடக்கத்தில் கீர்த்தனைப்பகுதியாம் முதற் பகுதியையும், உடனே வசனப்பகுதியாம் இரண்டாம் பாகத்தையும் அவர் வெளியிட்டனர். மூன்றாம் பகுதியாக உரைப்பகுதியிலும், நான்காம் பகுதியாகிய உபதேசப்பகுதியிலும் இதுவரை அச்சில் வெளி வாராத பல அரிய விஷயங்கள் உள்ளன. இப்பகுதிகளின் விலை முறையே அணா 4, 9, 8. ஒவ்வொருவரும் இவ்வடக்க விலைப்பதிப்புக்களை வாங்கவேண்டும். வேண்டுவோர் முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை என்ற விலாசத்துக்கு எழுதுக.